# ஸ்ரீமத் பகவத் கீதை

## ( புருஷோத்தம யோகம் )




தொகுப்பாசிரியர் :

**B.இராகவேந்திரன்** B.E.,

அம்பத்தூர், சென்னை - 600 053.

லைபேசி : (044) 26580704.

ஹரி ஸர்வோத்தமா !

வாயு ஜீவோத்தமா !!

# ஸ்ரீமத் பகவத் கீதை

## ( புராண புருஷோத்தம யோகம் என்னும் பதினைந்தாம் அத்தியாயம் )

(ஸ்ரீமத்வமத ஸித்தாந்தத்தை அநுசரித்து எழுதப்பட்டது)




நூலாசிரியர் :

**B.இராகவேந்திரன்** B.E.,

அம்பத்தூர், சென்னை - 600 053.

தொலைபேசி : (044) 26580704.

# யார்?

இது ஒரு தொழிற்சாலையைப் பற்றிய செய்தி.
இந்த தொழிற்சாலையில் கீழ்கண்ட பிரிவு அலுவலகங்கள் உள்ளன.

1. Head Office
2. Structural Engineering Department
3. Energy Processing Department
4. Energy Utilization Department
5. Transport & Distribution Department
6. Sewage Disposal Department
7. Maintanance & Welfare Department
    a) Internal Management System
    b) Defense System
    c) Internal Workshop & Repair System
8. Photocopy Department

Think of a factory with 10,000 billion people working. All the workers are getting food, salary regularly and happily working together for 70 - 100 years. This factory is capable of any kind of job, the space required to put up the factory is very small and it can be transported to anywhere in the world. The factory is protected from all sides - only two entry gates and two exit gates are there. The head office is the most wonderful unit with immense capablities, is housed separately from the factory, well protected but continuously running the factory through flexible tunnel. The most interesting thing is that if two such factories want they can together make another factory in less than one year. The factory is self sufficient all it needs is 2

kilograms of food, two litres of water and some oxygen on daily basis to keep the workers alive and happy. The factory is run by different departments which are mentioned above:

Who has made such a wonderful factory? when there is so much disturbance, mismanagement in running a household of four people, and office of twenty people, a manufacturing unit of 100 people, a municipality of two lac residents, a city of one crore population or a country of 100 billion people, how it is possible to make and manage such a factory with 10,000 billion people working for 100 years!

Thanks : SAAOL TIMES, Saaol Heart Centre
Delhi - 11024
Editorial in Saaol Times, May 2012 Issue

Thanks to Dr. Bimal Chhajer M.D.,

Who has saved thousands of patients from heart disease by reversing the blockages without heart surgery or invasive procedures

இப்பேற்பட்ட இவ்வளவு சிக்கலான பெரிய தொழிற்சாலையை அமைத்தது யார்? இதை நிர்வாகம் செய்வது யார்?

இந்தத் தொழிற்சாலை நமது உடம்புதான் என்று யூகம் செய்திருப்பீர்கள்.

பகவான் ஹரி இதனுள் சாந்நித்தியம் கொண்டு இருக்கிறான். அவன் சாந்நித்ய விசேஷத்தால் ஸ்ரீவாயு தேவர் இதனை வழி நடத்திச் செல்கிறார்.

இது இந்த கீதா சாஸ்திரம் பதினைந்தாம் அத்தியாயத்தில் கூறப்படும் பல்வேறு முக்கியக் கருத்துகளில் ஒன்றாகும்.

# நூலின் விபரம்

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | **ஸ்ரீமத் பகவத்கீதை**<br>பதினைந்தாம் அத்தியாயம் |
| ஆசிரியர் | : | **B. இராகவேந்திரன்** |
| முதற்பதிப்பு | : | ஜூலை,2012 |
| விலை | : | ரூ.50/- |
| மொத்தப் பக்கங்கள் | : | 80+8 |
| கணிணி மற்றும் அச்சிட்டோர் | : | **VLM OFFSET PRINTERS**<br>71, Mounasamy Madam Street,<br>Venkatapuram, Ambattur,<br>Chennai - 600 053.<br>Cell : 9444127240,9710564656 |



சென்னை தர்மப்பிரகாஷ் திருமண மண்டபத்தில்

**ஸ்ரீபேஜாவர் மடாதீசர்**

**ஸ்ரீஸ்ரீ விச்வேச தீர்த்த ஸ்ரீபாதங்கள் அவர்கள்**

முன்னிலையில் **ஸ்ரீஸ்ரீடீகாசார்யர் ஆராதனை**

**மஹோத்ஸவத்தில் 22.07.2012** அன்று இந்நூல்

வெளியிடப்பட்டது.

## நூலாசிரியர் முன்னுரை

ஸ்ரீ ஹரி, ஸர்வோத்தமன், ஸ்ரீமந் நாராயணன் மற்றும் ஸ்ரீவாயு தேவர் திருவருளால் அடியேனது எட்டாவது நூலாக ஸ்ரீகிருஷ்ணன் அர்ச்சுனனுக்கு உபதேசித்த பகவத்கீதை நூல் வெளியாகிறது.

ஸ்ரீகிருஷ்ணன் தேவகியின் எட்டாவது குழந்தை. இந்த நூல் எனக்கு எட்டாவது (புஸ்தகக்) குழந்தை.

அவன் எட்டாமவன். ஆனால் எட்டாதவன் அல்ல. திடபக்தியால் அவனை சுலபமாக எட்டி விடலாம். அதற்கு முன் நிறைய சாதனைகள் தேவை. அவற்றை உபதேசிப்பது ஸ்ரீவேதவ்யாஸர் இயற்றிய சாஸ்திரங்கள் மற்றும் மத்வயதிகள் நமக்கு விட்டுச் சென்றுள்ள சாஸ்திர நூல்கள். இதில் தலை சிறந்தது மகாபாரதம். (பஞ்சமோ வேத:) வேதங்களுக்கு நிகரானது. அதில் வரும் கீதை மிக உயர்ந்த சாஸ்திரம். இதில் பதினைந்தாம் அத்தியாயம் தலை சிறந்தது. இதனை பரமாத்மனின் பாதகமலங்களில் சமர்ப்பிக்கின்றேன்.

அன்புடன்

**இராகவேந்திரன்**



# நன்றி !



1. இந்தப் புத்தகத்தை என்னால் ஏற்பட்ட தாமதத்தையும் மீறி, குறுகிய காலத்தில் சிறப்பாக கணிணி அச்சு (DTP) செய்து அச்சடித்துக் கொடுத்த VLM ஆஃப்செட் பிரிண்டர்ஸ் நிறுவனத்திற்கு மிக்க நன்றி!

2. இந்தப் புத்தகத்தை படித்துப் பார்த்து பிழைகளை நீக்கி சரியான வாக்கியங்களை போட்டுக் கொடுத்து மெருகூட்டிக் கொடுத்த பாப்பாரப்பட்டி ஸ்ரீமான் நாராயணராவ் அவர்களுக்கு எனது நன்றி!

3. ஜூலை மாதம் 22ந் தேதி (2012) அன்று தர்மப்பிரகாஷ் மண்டபத்தில் நடைபெற்ற ஸ்ரீஸ்ரீடீகாச்சார்யர் ஆராதனை மஹோத்ஸவ காலத்தில் மத்வமஹனீயர் பேஜாவர் மடாதீசர் முன்னிலையில் இப்புத்தகத்தை வெளியிட அனுமதி அளித்த சென்னை கே.கே.நகர் மத்வஸேவா டிரஸ்ட் நிறுவனத்தினருக்கும் எனது நன்றி!

4. திரு.கணேஷ் குருராஜன் அவர்களுக்கு எனது பிரத்தியேக மனமார்ந்த நன்றிகள்.

## எமது இதர வெளியீடுகள்

| | |
|---|---|
| **"ஸ்ரீ இராகவேந்திர ஸ்தோத்திரம்"** மூலம் ஸம்ஸ்க்ருதம் மற்றும் தமிழில் பதவுரை, ஸ்வஸ்தி ஸ்தோத்திரங்களும் | FREE (Out of Print) |
| **"ஸ்ரீமத்வ மத ஸித்தாந்த ஸாரம்"** | FREE (Out of Print) |
| **"உபநயனம், ஸந்த்யாவந்தனம் காயத்ரீ, மகிமை"** (கோத்ரம்) பிரவரங்கள் விவரத்துடன்) | FREE (Out of Print) |

(மேற்கண்ட மூன்று நூல்களையும் மறுபதிப்பு செய்ய நன்கொடையாளர்கள் வரவேற்கப்படுகின்றனர்)

| | |
|---|---|
| **ஸ்ரீவியாஸராஜர் இயற்றிய "க்ரந்தமாலிகா ஸ்தோத்ரம்"** (தமிழில் அர்த்தத்துடன், ஸ்ரீமத்வர் வரலாறு, அவருடைய ஸர்வ மூலக்ரந்தங்கள், விஷயச்சுருக்கத்துடன்) | Rs.15/- |
| **"ஸ்ரீஹரிவாயுஸ்துதி"** (மூலம் - தமிழில் மற்றும் தமிழாக்கச் செய்யுள் வடிவம், பதவுரை, சிறப்புக் குறிப்புகளுடன்) | Rs.50/- |
| **"ஸ்ரீஹரிவாயுஸ்துதி"** (பாராயண புஸ்தகம் மூலம் தமிழில், தமிழாக்கச் செய்யுள் வடிவம், ஸ்ரீவாதிராஜரின் லகுவாயுஸ்துதி) | Rs.15/- |
| **"அவதூத கீதை"** (ஸ்ரீமத் பாகவதம்) | Rs.25/- |

*புத்தகங்கள் கிடைக்குமிடம்:*

**B.இராகவேந்திரன்**
அம்பத்தூர், சென்னை - 600 053.
தொலைபேசி : (044) 26580704. செல் : 97907 33356.

*குறிப்பு : புத்தகங்கள் வேண்டுவோர் தபால் / கூரியர் செலவை ஏற்றுக் கொள்ளுமாறு வேண்டப்படுகின்றனர்.*

# கீதா மஹாத்மியம்

**ஏகம் சாஸ்த்ரம் தேவகீபுத்ரகீதம்**

**ஏகோ தே$_3$வோ தே$_3$வகீ புத்ரஏவ |**

**ஏகோ மந்த்ரஸ்தஸ்ய நாமானி யானி**

**கர்மாப்யேகம் தஸ்ய தே$_3$வஸ்ய ஸேவா ||**

தேவகீ புத்ரனாகிய பகவான் ஸ்ரீகிருஷ்ணனால் கூறப்பட்ட கீதை ஒன்றே சாஸ்திரம் தேவகீபுத்ரனாய் அவதரித்த பகவான் ஸ்ரீகிருஷ்ணன் ஒருவனே தேவன். அந்த ஸ்ரீகிருஷ்ணனின் நாமங்கள் (பல்வேறு பெயர்கள்) எவையோ அவை ஒன்றே மந்திரங்கள் அந்த தேவனின் ஸேவை ஒன்றே கர்மங்கள்.

கீதா மஹாத்மியம் என்னும் நூலை எழுதியவர் ஸாக்ஷாத் பரமாத்மா ஸ்ரீஹரியின் அவதாரமேயான ஸ்ரீவேதவ்யாஸ பகவான். அவரே மஹாபாரதம் மற்றும்அதன் நடுவே வரும் ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன ஸம்வாதமான ஸ்ரீமத் பகவத்கீதையையும் நமக்குக் கொடுத்தவர்

கீதையில் இருக்கும் ஸ்லோகங்கள் 701 ஆனால் கீதாமஹாத்மியத்தில் இருப்பவை 1023 கீதையா? அது

வயதான கிழவர்கள், ஸந்நியாசிகள் ஸாதுக்கள் படிக்க வேண்டிய புஸ்தகம் எனக்கு இதில் என்ன இருக்கிறது? என்று கேட்கும் பாமர மக்களுக்கும் அதில் ஆசை உண்டாகும்படிக்கு மருந்து வேண்டாமென அடம்பிடிக்கும் குழந்தைக்கு தேன், வெல்லம் போன்றவற்றைக் காட்டி ஆசைக்காட்டி மருந்தை ஊட்டும் தாயுள்ளம் போன்று, பதினெட்டு அத்தியாயங்களுக்கும் பதினெட்டு சுவையான கதைகள் மூலம் இதைப்படித்தால் இன்ன பலன் கிடைக்கும் என்று ஸ்ரீவியாஸர் எழுதி வைத்திருக்கிறார். இது பத்ம புராணத்தில் வருகிறது.

ஸ்ரீ பரமாத்மா, ஸ்ரீ ஹரி, ஸ்ரீமத் நாராயணன், ஸ்ரீ கிருஷ்ணன் ஸ்ரீ வேதவ்யாஸர் இவர்கள் எல்லோரும் கூறிய ஒவ்வொரு வார்த்தையும் உண்மை, ஸத்யம் அவர்கள் பொய் பெச வேண்டிய அவசியமும் இல்லை. பொய்யும் பேச மாட்டார்கள். இந்தக் கதைகள் உருவகக் கதைகள் அல்ல. பலவேறு கால கட்டங்களில் நிஜமாக நிகழ்ந்த நிகழ்வுகள் ஸர்வக்ஞரான ஸ்ரீ வியாஸதேவர் தமது அதீதமான ஞானதிருஷ்டி மூலம் அவற்றைக் கண்டு கதைகளாய்த் தொகுத்து வழங்கியிருக்கிறார்.
எனவே இது கதையல்ல, நிஜம்! இந்த பதினெட்டு கதைகளில் பதினைந்தாம் அத்யாயத்துக்கான கதையை சுருக்கமாகப் பார்த்துவிட்டு, கீதையைப் படிக்கப் போகலாம்.

ஒரு காலத்தில் பாரததேசத்தின் ஒரு பகுதியான கௌடதேசத்தை க்ருபாண நரசிம்ஹன் என்ற அரசன் ஆண்டு வந்தான். அந்த அரசனிடம் சாபபேருண்ட என்னும் சேனாதிபதி இருந்தான்.

சஸ்திரம், சாஸ்திரம், கலை எல்லாவற்றிலும் வல்லவன். அரசனுக்கு நிகரானவன்.

ஒரு ஸமயம் இந்த சாபபேருண்டனுக்கு தானே ஏன் அரசனாகக் கூடாது ? என்ற அதர்மமான மன ஆசை வந்துவிட்டது.

அதனால் அரசனையும், ராஜகுமாரனையும் கொல்ல சதித்திட்டம் தீட்டினான். ஆனால் அதற்கு முன் நெஞ்சு வலி வந்து இறந்தான் அந்த சேனாதிபதி. அப்படி இறந்த சாபபேருண்டன் சிந்து தேசத்தில் (துற்போது பாகிஸ்தானில் உள்ளது)

ஸகல லக்ஷணங்களும் தேஜஸும் கூடிய ஓர் குதிரையாகப் பிறந்தான். வணிகன் ஒருவன் அந்தக் குதிரையை மிகவும் நல்ல விலைக்கு க்ருபாண நரஸிம்ஹ ராஜனிடமே விற்று விட்டான்.

ஒரு ஸமயம் அந்தக் குதிரையின் மீதேறி அரசன் காட்டிற்கு வேட்டையாடச் சென்றான். மான்களை விரட்டிக் கொண்டு குதிரையில் வேகமாக சென்றவனை அரசனின் பரிவாரங்களால் தொடர முடியவில்லை. தாகத்தால் தவித்த அரசன் குதிரையிலிருந்து இறங்கி அதை ஒரு

மரத்தில் கட்டி விட்டு ஒரு உயரமான பெரிய பாறை மீது ஏறி நின்று சுற்றிலும் பார்த்தான். அச்சமயத்தில் காற்றில் வேகமாக அடித்துக் கொண்டு வந்த ஒரு பனை ஓலை அவனருகில் விழுந்தது. அதில் ஏதோ எழுதப்பட்டிருப்பதைப் பார்த்த அரசன் என்ன எழுதி இருக்கிறதென்று உரக்கப் படித்தான்.

**ஊர்த்$_4$வமூலமத$_4$ ஸாக$_2$மஸ்வத்த$_2$ம் ப்ராஹுரவ்யயம் !**

இது பகவத் கீதை பதினைந்தாவது அத்யாயத்தின் முதல் ஸ்லோகத்தின் முதல் அடி.

இதைக் காதால் கேட்டதும் அந்தக் குதிரையின் உயிர் பிரிந்தது.

அரசன் கலக்கமும் பயமும் அடைந்து இறந்து கிடந்த அந்தக் குதிரையை எழுப்ப பலவாறாக முயற்சித்தும் பலனில்லை. அப்போது முன் ஜன்ம சேனாதிபதி சாபபேருண்டன் ஆகாயத்தில் நின்று கொண்டு "மஹாராஜா" என்றவாறு அரசனைப் பார்த்து கைகுவித்து பின்னர் தனக்காக வந்திருந்த திவ்யமான விமானத்தில் அமர்ந்து தேவலோகத்தை அடைந்தான்.

இதைப் பார்த்து ஆச்சர்யமடைந்த அரசன் சற்றுத் தொலைவில் கண்ணுக்குத் தெரிந்த ஆச்ரமத்தை அடைந்தான். அங்கு விஷ்ணுசர்மா என்ற முனிவர் இருந்தார். அரசனிடம் நடந்தவற்றைக் கேட்ட த்ரிகால க்ஞானியான அந்த முனிவர்,

"அரசனே! முன்பு உன்னிடம் சேநாதிபதியாக இருந்த சாபபேருண்டனே அந்தக் குதிரை, தானே அரசனாகும் பேராசையால் உன்னையும், ராஜகுமாரனையும் கொன்று போடத் திட்டமிட்டான். அதற்கு முன் நெஞ்சு வலியில் இறந்தான். எஜமானத்துரோகம் காரணமாக குதிரை ஜென்மம் எடுத்தான். கீதா ஸ்லோகத்தை குதிரை கேட்டதால் அதன் பாவங்கள் தீர்ந்து ஸ்வர்க்கப்ராப்தி அடைந்தது" என்று கூறினார்.

இதைக் கேட்ட அரசன் நாட்டிற்குத் திரும்பி வந்து தனது மகன் ஸிம்ஹபலன் என்பவனுக்கு பட்டம் சூட்டி அரசனாக்கி, அந்த ஸ்லோகத்தையும், கீதையையும் படிப்பதில் மூழ்கித் தானும் நற்கதி அடைந்தான்.

இந்தக் கதையைப் பற்றி இன்னும் கொஞ்சம் விவரம் புத்தகத்தின் கடைசியில் கீதாசாஸ்திரம் முடிந்ததும் வருகிறது. தவறாமல் படித்துப் பயனடையுங்கள்



**அத்யாயச் சுருக்கம்:**

ஸர்வ சாஸ்திரங்களிலும் மஹாபாரதம் சிறந்தது. மஹாபாரதத்தில் கீதை சிறந்தது. கீதையில் 15ம் அத்தியாயம் சிறந்தது. அதிலும் 16,17,18,19,ம் ஸ்லோகங்கள் மத்வ மதத்தைப் பொறுத்தவரை மிகச் சிறப்பானவை. ஏனெனில் இவற்றில் ஶ்ரீமத்வரின் ஸித்தாந்தங்கள் அடங்கியுள்ளன. எனவே ஶ்ரீமதாச்சார்யர் தமது பல்வேறு கிரந்தங்களில் இவற்றை உதாஹரித்துள்ளார். இவற்றை நாம் அந்தந்த சுலோகங்கள் வரும் போது பார்ப்போம்.

ப்ரக்ருதி முதலிய 25 தத்வங்களை பரமாத்மா 13ம் அத்யாயம் 6,7வது ஸ்லோகங்களில் விவரித்து உலகத்தின் (ஜகத்) ஸ்வரூபம் (Nature) பற்றி சுருக்கமாக கூறியிருந்தார். அதனையே இந்த பதினைந்தாம் அத்யாயத்தில் விவரமாகக் கூறியிருக்கிறார்.

பதினான்காம் அத்தியாயத்தில், ஸத்வ ரஜோ மற்றும் தமோ குணங்கள் பற்றி கூறி அவற்றின் ஸ்வரூபம், பந்தப்பட்டவர்கள் தரங்கள், முக்குணங்களினால் ஏற்படும் விளைவுகள் முக்குண மனிதர்களின் கதி ஆகியவற்றை விளக்கி இருக்கிறார் பகவான். இந்த முக்குணங்களின் பிடியிலிருந்து விடுபட்டு, உயர்ந்த பக்தியுடன் இறைவனை வழிபட்டால், மோக்ஷ ஸாதனம் (பிறவாநிலை) கிட்டும். அவ்வாறு பக்தி

யார் மீது செய்யப்பட வேண்டும், அந்த புருஷோத்தமன் யார் என்பனவெல்லாம் இந்த அத்யாத்தில் உள்ளது. மிக உயர்ந்த ரஹஸ்யங்கள் (முக்தியோக்யர்கள் தெரிந்து கொள்ள வேண்டியவை) இந்த அத்தியாயத்தில் உள்ளது. இவற்றைத் தெரிந்து கொண்டு அதன் படி வாழ்வை அமைத்து க் கொண்டால் மிக உயர்ந்ததை நற்கதியை அடைவாய் என்று கூறி முடிக்கிறர் ஸ்ரீ க்ருஷ்ண பகவான்.

ஸம்ஸார, ப்ரக்ருதி, ஜகத் விருக்ஷத்தை விவரித்து அந்த வ்ருக்ஷத்தை வைராக்யம் என்னும் கோடாலியால் வெட்ட வேண்டும் என்று ஆரம்பிக்கிறார். அதைக் கூறுமுகமாக முதலில் ஜகத் என்னும் (Concept)ஐ ஓர் விருட்சத்துக்கு ஒப்பிட்டுக் கூற ஆரம்பிக்கிறார்.

## ஸ்ரீபகவானுவாச:-

**ஊர்த்$^4$வமூலம் அத$^4$ஸ் $^{sc}$சாகம்,**

**அஸ்வத்த$^2$ம் $_p$ப்ராஹுரவ்யயம்**

**$^2$சந்தாம்ஸி யஸ்ய பர்ணானி**

**யஸ்தம் வேத$^3$ஸ வேத$^3$வித்** || 1 ||

பகவானாகிய ஸ்ரீ கிருஷ்ணன் கூறுவது:-

1. ஜடத்தில் மேலான (த்ரிகுணாத் மகமான ப்ரக்ருதி (அஸ்வதந்த்ரர்களில் மேலானவளான) மஹாலக்ஷ்மீ, ஸர்வோத்தமனான பரமாத்மா (ஆகிய) இவைகளை வேராக உடையதும்; (மேலே வேராகவும்)

2.0 மேலே கூறப்பட்ட மூன்றையும் விட கீழான, அபிமான தேவதைகளுடன் கூடிய மஹத்தத்வம், அஹங்கார, புத்தி தத்வங்கள், பஞ்சபூதங்கள் இவைகளை கிளைகளாக கீழே உடையதும்;

3.0 இன்றிருப்பது போல் நாளை இன்றி அவ்வப்போது மாற்றங்களை அடைவதாகவும்;

4.0 நாசமடையாமல் என்றென்றும் (நதி ப்ரவாஹத்தைப் போல்) இருந்து கொண்டே இருப்பதாகவும்; (உள்ள)

5.0 இந்த ஜகத்தை ஒரு அஸ்வத்த (அரச) மரம் என்று அறிஞர்கள் கூறுகிறார்கள்.

6.0 (அந்த அரச மரத்திற்கு) அபிமான தேவர்களுடன் கூடிய வேதவாக்யங்கள் இலைகளாக இருக்கின்றன என்கின்றனர்.

7.0 அந்த ஜகத் விருக்ஷத்தை இவ்வாறு உள்ளதாக எவன் தெரிந்து கொள்கிறானோ அவனே ஸகல வேதங்களின் அர்த்தங்களையும் அறிந்தவன்.

**விளக்கம்:**

இந்த ஸ்லோகம் ஒரு புதிர் போல் இருக்கிறதே? ஆமாம்! இது ஒரு புதிர். ஆனால் இது புதிரல்ல!

என்ன சுவாமி! ஸ்லோகத்தின் அர்த்தத்தை படித்தவுடன் முதலிலேயே தலை சுற்றுகிறது. நீர் வேறு. புதிய புதிர் ஒன்றைப் போடுகிறீர்களே என்று நீங்கள் கேட்பது புரிகிறது.

முதலில் நான் போட்ட குட்டிப் புதிருக்கு விளக்கம் தந்து விட்டு ஸ்லோகத்தின் புதிரை விடுவிக்கப் பார்ப்போம்.

ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா முக்காலமும் எக்காலமும் உணர்ந்தவன். தன் எதிரே நிற்பவனின் முந்தைய ஜன்மங்கள், பின் வரப்போகிற ஜன்மங்கள் எல்லாவற்றையும் அறிந்தவன். (7ம் அத்யாயம் 26ம் ஸ்லோகம் பார்க்கவும்) அர்ஜுனனின் தேர்க்கொடியில் அமர்ந்திருக்கும் முக்யப்ராண தேவரையும் ஸ்ரீ கிருஷ்ணன் அறிவான். பரம பாகவத தர்மத்தை எப்போதும் அனுஷ்டானம் செய்து கொண்டு, அதே யுத்த களத்தில் இருக்கும் பீமஸேனரையும் இறைவன் அறிவான். அடுத்து வரும் கலியுகத்தில் வாயு தேவரின் மூன்றாம் அவதாரமாக ஸ்ரீமத்வர் (ஸ்ரீமதாச்சார்யர்) பிறந்து இதே கீதையை ஸஜ்ஜனர்களுக்கு நன்கு புரிய வைக்கப் போகிறார் என்பதையும் ஸ்ரீகிருஷ்ணன் அறிவான்.

அவன் ஒரு VVIP அல்லவா? அவன் சொல்வது உலகம் முழுவதும் பரவும் அல்லவா? முக்தியோக்யர்கள் அவற்றைப் படித்துப் புரிந்து கொண்டு ஞான ஸம்பாதனை செய்து கொண்டு ஞானமார்க்கத்தில் சென்று மோக்ஷ ஸாம்ராஜ்யத்தை அடையவும் இதே கீதை உதவ வேண்டும். அதே ஸமயம் இதைப் படிக்கும் தைத்யாவேச தமோயோக்ய ஜீவர்கள் இவற்றைத்

தவறாகப் புரிந்து கொண்டு அந்தந்தமஸெனும் நரகத்துக்குப் போகவும் இதே கீதை உபயோகமாக வேண்டும். ஆகையால் ஸஜ்ஜனருக்கு ஸரியாகப் புரியும் புதிராக (புதிரே அல்ல) வும் துர்ஜனருக்கு தவறாகப் புரியும் புதிராகவும் (புதிரேதான்) இருக்கும்படியாக இவ்வாறு கூறியிருக்கிறான் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா. ஆகவே இது புதிராகவும், புதிர் அல்லாமலும் உள்ளது. ஸ்ரீமத்வரும் அவருக்குப் பின் வந்த யதிவரேண்யர்களும் இந்தப் புதிரை நமக்காக நன்கு விடுவித்துக் கொடுத்துள்ளனர். அதனைப் பார்ப்போம்.

1.0 முதலில் இந்த ஜகத்தை எப்படி அச்வத்த மரத்துக்கு ஒப்பிட்டிருக்கிறார் என்பதைப் பார்த்து விடுவோம்.

**அஸ்வவத் திஷ்டதி இதி அஸ்வத்தா,** ||

1.0 அதாவது இந்த உலகம் இன்று இருப்பது போல் நாளை இருக்காது. மாறுதலையுடையது. அதே ஸமயம் பிரளய காலத்தில் நாசமடைவது குதிரை போன்று சஞ்சலமாயுள்ளது.

2.0 ஒரு மரம் தழைத்து உறுதியாக வளர்ந்து நிற்பதற்கு அதன் வேர்தான் முக்கிய காரணம். அதே போல் இந்த ஜகத் (உலகம் அல்லது Universe) துக்கு வேராக பரமாத்மா, மஹாலக்ஷ்மி, ப்ரக்ருதி ஆகியவைகள் கூறப்பட்டுள்ளன.

3.0 மஹத் தத்வம், அஹங்காரம், புத்தி தத்வங்கள், பஞ்ச பூதங்கள் ஆகியவையே பிரம்மலோகம் முதல் பாதாள லோகம் வரை இந்த (ஸம்ஸார) ஜகத்தில் உள்ள எல்லாப் பொருட்கள், எல்லா உயிரினங்கள் ஆகியவைகளில் பரவியுள்ளன. எனவே இவைகளை இந்த (அஸ்வத்த) மரத்தின் கிளைகளாக ஸ்ரீபகவான் உருவகப் படுத்தி இருக்கிறார்.

4.0 இந்த உலகம் (ஜகத்) மாறிக் கொண்டே இருந்தாலும் என்றென்றும் நாசமடையாமல் இருக்கிறது. ஸ்தூலரூபம் பிரளய காலத்தில் நாசமடைந்தாலும் ஸூக்ஷ்மரூபம் நாசமடைவதில்லை. இதையே அவ்யயம் என்னும் சொல் குறிக்கிறது.

மேலும் நாம் தினமும் ஸந்த்யாவந்தனம் செய்யும் போது பாபபுருஷ விஸர்ஜனம் என்னும் ஒரு மந்திரத்தைச் சொல்லி நம் மனதில் (மற்றும் உடலில்) சேர்ந்துள்ள கலிபுருஷனை (தீய சக்தியை) விரட்டுகிறோம்.

அந்த மந்திரத்தில் "ஓம் ருதம் சஸத்யம் சாபீத்யாத் " என்று வருகிறது.

| | | |
|---|---|---|
| ருதம் | - | ஒரே தன்மை (நாசமின்மை) |
| ஸத்யம் | - | உண்மை |
| அபீத்ய | - | தோஷமின்மை |
| தபஸ் | - | வலிமை, பிரதிக்ஞை. |

ஸ்ரீ பகவானின் (பரமாத்மனின்) பிரதிக்ஞையால் பிரளயம், ஜலப்ரவாஹம், நான்முகன் ஆகியோர் தோன்றினர்.

"தாதா யதாபூர்வம் அகல்பயத்" இதற்கு முந்தைய கல்பங்களில் இருந்தது போலவே யாவற்றையும் (நான்முகன் மூலம்) ஸ்ரீமந் நாராயணன் உண்டாக்கினான் என்று கூறுகிறோம்.

ஸ்ரீவியாஸராஜ ஸ்வாமிகள் மத்வமதம் என்றால் என்ன? என்னும் கேள்விக்கு பதில் கூறும் போது முதலில் கூறுவது ஸத்யம் ஜகத் இந்த ஜகத் என்பது ஸத்யமானது. மித்யையல்ல என்கிறார். இந்த தத்வம் இந்த ஸ்லோகத்தின் உட்கிடையாக இருப்பது தெரிகிறது.

5.0. மரம் படர்ந்து செழித்துக் கிளைத்து வளர்ந்தது போல, வேதங்களே அந்த (ஜகத் அல்லது ஸம்ஸார) விருட்சத்தின் இலைகளாக உள்ளன என்று கூறுகிறார். அப்படியென்றால்?

வேதங்கள் மனிதன் வாழ்க்கையை நடத்துவதற்கான வழிமுறைகளையும், சுகபோகங்களைக் கொடுக்கும் யாக, யக்ஞாதிகளை விளக்குவது. எனவே அதுவே மனிதனுக்கு ஐம்புலன்களுக்குத் தீனியான சுகபோகங்களைக் கொடுப்பது. மரங்களிலும், இலைகள் மூலமாக மரம் பூத்து, காய்த்து பழங்களைத் தருகிறது. அதே போல வேதங்களும் மனித வாழ்வின் முக்கிய

பயனாகிய மோக்ஷம் சற்று அமுக்ய பலனாகிய சொர்க்காதி போகங்கள் ஆகியவற்றைக் கொடுக்கும் உபகரணமாக அமைந்துள்ளன. எனவே இந்த ஜகத் விருட்சமான அச்வத்த மரத்துக்கு வேதங்களே இலைகள் (பர்ணானி) என்பது சாலப் பொருத்தம்.

6.0 கடைசியாக இந்த ஜகத்விருட்சத்தை இவ்வாறு உள்ளதாக அறிந்தவன் ஸகல வேதங்களையும் அறிந்தவன் ஆகிறான் என்று ஸ்ரீ பகவான் கூறுகிறார்.

இதன் விளக்கம்:

இதே அத்யாயத்தில் 15வது ஸ்லோகத்தில் ஸர்வை: வேதை : ச அஹம் ஏவ வேத்ய : என்று பரமாத்மா ஸ்ரீ கிருஷ்ணன் கூறுகிறார். ஸ்ரீமத்வமதத்தின் கோட்பாடுகளில் ஒன்றான "அகிலாம் ந்யாயைக வேத்யோ ஹரி" என்னும் பதங்கள் ஆகியன யாவும் ஸ்ரீமந் நாராயணன் வேதங்கள் மூலமே அறியப்பட முடியும் என்று கூறுகின்றன.

ஸ்ரீமத்வாசார்யரின் விஷ்ணுதத்வ விநிர்ணயம் என்னும் க்ரந்தத்தில் மங்கள ஸ்லோகம் **ஓம் ஸதாகமைக விக்ஞேயம்** என்று ஆரம்பிக்கிறது.

ஸதாகமங்கள் மூலமே ஸ்ரீமந் நாராயணர் அறியப்படுகிறார் என்பது இதன் பொருள். (ஸதாகமங்கள் என்பன மொத்தம் 8.

அவை

(1) ரிக் வேதம் (2) யஜுர் வேதம்

(3) ஸாம வேதம் (4) அதர்வண தேவதம்

(5) மஹாபாரதம் (6) பாஞ்சராத்ரங்கள்.

(7) மூலராமாயணம் (வால்மீகி ராமாயணம் அல்ல)

8. மேலும் 1 முதல் 7ல் கூறப்பட்டவைகளை மறுதளித்துப் பேசாத (not contradicting) மற்ற எல்லாக்ரந்தங்களும்.

ஆகையால் வேதங்களை அறிவது என்பதும், பரமாத்வை அறிவது என்பதும் இரண்டும் ஒன்றுதான். இந்த ஜகத் என்னும் அச்வத்த விருட்சத்தில் மூலாதாரமாகவும், முழுமையாக எல்லாப் பகுதிகளிலும் நீக்கமற நிறைந்து இருக்கும் பரமாத்வை அறிந்தவன் மோக்ஷத்தை எய்துவான் என்பது இந்த பதினைந்தாம் அத்யாயத்தின் முதல் ஸ்லோகத்தின் முக்கியப் பொருள்.

**அதஸ்சோர்த்த[4]வம் ப்ரஸ்ருதாஸ்தஸ்ய சாகா கு[3]ணப்ரவ்ருத்[4]தா[3] விஷயப்ரவாலா:**

**அத[4]ஸ்ச மூலான்யனுஸந்ததானி**

**கர்மானுப[3]ந்தீனி மனுஷ்யலோகே || 2 ||**

இந்த ஸ்லோகத்திற்கு அர்த்தம் என்று பார்ப்பதற்கு முன் கீழ்க்கண்ட விஷயங்களை ஞாபகம் வைத்துக் கொள்ள வேண்டும்.

<u>அவை:</u>

1. ஜகத்விருக்ஷம்
2. மரத்தில் செழித்து வளர்ந்திருக்கும் கிளைகள்
3. கிளைகளில் வளர்ந்திருக்கும் தளிர்கள்.
4. ஸத்வ,ரஜோ மற்றும் தமோ குணங்கள்.
5. ஐம்பொறிகள் (ரூபம், ரஸம், கந்தம்/வாஸனை, இத்யாதிகள்)
6. மஹத், அஹங்காரம், புத்தி மற்றும் பஞ்சபூதங்கள் (நிலம், நீர், ஆகாயம் இத்யாதிகள்) ஆகியன.
7. பரமாத்மா, மஹாலக்ஷ்மி, ப்ரக்ருதி (Primordial Matter) ஆகியவை.

இப்போது அர்த்தத்தைப் பார்ப்போம்.

மஹத் தத்துவம், அஹங்கார தத்வம், புத்தி தத்வம் மற்றும் நிலம், நீர், ஆகாயம், அக்னி, வாயு என்னும் பஞ்சமகாபூதங்கள் ஆகிய இவை எட்டு தத்வங்களும் அவற்றின் அபிமானி தேவர்களும் இந்த ஜகத் விருக்ஷத்தின் கிளைகளாக உள்ளனர்.

| | பஞ்சபூதங்கள் | பஞ்சபூதங்களின் பஞ்ச தன்மாத்திரைகள் |
|---|---|---|
| 1. | ஆகாயம் | ஸப்தம் (ஓசை) |
| 2. | வாயு | ஸ்பர்சம் |
| 3. | அக்னி | ரூபம் |
| 4. | நீர் | ரஸம் |
| 5. | நிலம் | வாஸனை (கந்தம்) |

மேலே கூறப்பட்ட பஞ்சபூதங்களை ஜகத் விருக்ஷத்தின் கிளைகளாக உருவகப்படுத்தியுள்ளார் பகவான் கிருஷ்ணர் பஞ்சபூதங்களின் தன் மாத்திரைகளான ஸப்தம் ரூபம் முதலியன அந்தக் கிளைகளில் செழித்து வளரும் தளிர்கள். ஸரி, இந்தத் தளிர்களும், அந்தக் கிளைகளும் செழித்து வளரத் தேவையான சக்தி எங்கிருந்து வருகிறது? வேர்களில் இருந்துதான்! இந்த வேர்கள் எவ்வாறு உருவகப்படுத்தப் பட்டுள்ளன என்றால், ஜடப் ப்ரக்ருதியே இந்த விருக்ஷத்தின் ஆணிவேர். ஸத்வ, ரஜோ, தமோ குணங்கள் எனப்படும் முக்குணங்களே கிளைவேர்கள்.

மேலே கூறப்பட்ட எட்டுத் தத்வங்கள் மற்றும் அந்தத் தத்வங்களின் அபிமானி தேவதைகள் யாவரும் மேலும் கீழும் ஸக்ஷ்ம ரூபங்களில் பரவி இருக்கின்றனர். மேலும்? கீழும்?

"மேலும்"? என்றால் அந்தத் தத்வாபிமானி தேவதைகளை விட உயர்ந்ததும் அவர்களுக்குக் காரணமானது மாகிய ப்ரக்ருதி தத்துவத்திலும், "கீழும்"? என்றால் தம்மை விட கீழானவர்களாகிய மனிதர்கள், விலங்குகள் மற்றும் உயிருள்ள மரம், செடி, கொடி கிருமிகள் இத்யாதிகளிலும் என்பது பொருள்.

எப்படி ஒரு மரத்தில் தளிர்கள் நன்கு செழித்து வளர்ந்து பூவாகி, காயாகி, கனியாகி பலன்

கொடுக்கின்றனவோ, எப்படி அந்தத் தளிர்களுக்கு பூமியின் சாரம் வேர்கள் மூலம் கிடைக்கின்றனவோ அவ்வாறே, இந்த ஸம்ஸார, ஜகத்தில் பரமாத்மா ஸ்ரீமந் நாராயணனும், மஹாலக்ஷ்மியும், ஜடப்ரக்ருதி மற்றும் ஸத்வ, ரஜோ, தமோ குணங்களும் தத்வாபிமானி தேவதைகள், அந்த எட்டுத் தத்வங்கள் ஆகியோர், அந்தர்யாமியாக எல்லா ஜீவர்கள் மற்றும் அவரவர் தேகங்களில் அந்தர்யாமியாகப் பரவி இருக்கின்றனர்.

<u>சிறப்புக்குறிப்பு :</u>

1. ஒரு மரத்தின் தளிர்கள் தற்காலிகமானவை. அவை அதற்கடுத்த நிலைக்கு (பூ, காய், பழம்)-க்குப் போய் விட்டால்அதன் பின்னர் அவைகளால் மரத்திற்குப் பயனில்லை. அது போல ஐம்பொறிகள் எனப்படும் சப்தம், ரஸம், ரூபம் முதலிய விஷய ஸுகங்கள் மிகவும் தற்காலிகமானவை. தற்காலிக சுகம் (Temporary Pleasures) தருபவன. எனவே இவைகள் தளிர்கள் என்று கூறப்பட்டன.

2. பரமாத்மா ஸ்ரீமந் நாராயணன் இந்த விருட்சத்தின் ஒவ்வொரு இடத்திலும் (ஒவ்வொரு அணுவிலும்) - விருட்சம் அல்லது இந்த ஜகத் - சேதன, அசேதன (ஜீவர்கள், ஜடப்பொருட்கள்) எல்லாவற்றிலும் அந்தர்யாமியாகப் பரவி இருந்து ஜீவர்களின் ஒவ்வொரு கர்மாவுக்கும் அந்தக் கர்மங்களுக்கேற்ப பலன்களைத் தருபவனாக இருக்கிறான்.

3. மஹத்தத்வம் என்பது முழுக்க முழுக்க (99.9999.... 9%) ஸத்வ குணத்தால் ஆனது. ஸ்ரீசதுர்முகப் பிரம்மா மஹத் தத்வத் தாலானவர்.

4. மஹத் தத்வத்திலிருந்து அஹங்காரம், அதிலிருந்து புத்தி, அதிலிருந்து மனஸ், அதிலிருந்து இந்த்ரியங்கள் என்று கடவுளின் சிருஷ்டி தொடர்கிறது.

5. இவை எல்லாவற்றிற்கும் மூலகாரணம் மூலப்ரக்ருதி. இதன் அபிமானி தேவதை ஸ்ரீ மஹாலக்ஷ்மி தேவி.

6. இவை எல்லாவற்றையும் (Control) செய்பவர். அந்தர்யாமியாக இருந்து ஜகத்ஸ்ருஷ்டியை நடத்துபவர் ஸ்ரீமந் நாராயணர்.

7. இதுவே இந்த இரண்டாவது ஸ்லோகத்தின் சாராம்சம்.

8. இடமின்மை காரணமாக இவற்றை அதிகமாக விளக்க இயலவில்லை. ஸ்ரீமத் பாகவதத்தில் இந்த ச்ருஷ்டி விஷயங்கள் நன்றாக முழுமையாக விளக்கப்பட்டுள்ளன.

9. ஆகையால் ஸ்ரீமத் நாராயணனே இந்த ஜகத் (Universe) ஸம்ஸாரம் (Birth - Death Cycle) ஆகியவற்றை இயக்குகிறார் என்று புரிந்து கொள்ள வேண்டும்.

10. அவனின்றி ஓரணுவும் அசையாது என்பதன் பொருள் இது தான். "தேன விநா த்ருணமபி ந சலதே" என்று சாத்திரங்கள் பறைசாற்றுகின்றன.

இனி 3 வது சுலோகத்தின் முதல் பகுதியைப் பார்க்கப் போகிறோம்.

**ந ரூபமஸ்யேஹ ததே²ாபலப்⁴யதே,**

**நாந்தோ நசாதீ³ர் நச ஸம்ப்ரவிஷ்ட: (3A)**

இவ்வாறு கூறப்பட்ட ஜகத் விருட்சத்துக்கு நிலைத்த வடிவம் ஒன்றுமில்லை. இன்று இருப்பது போல நாளை இருப்பதில்லை. இவ்வாறு மாறுவதால் நன்கு அறியப்படுவதில்லை. ஜகத் காரணன் ஸ்ரீவிஷ்ணு (படைத்தவன்) அறியப்படுவதில்லை. இதற்குள்ளேயே பரவிக் கிடக்கும் அந்தர்யாமியான ஸ்ரீவிஷ்ணு அறியப்படுவதில்லை.

**விளக்கம்:**

1. சாதாரண ஜீவர்கள் அல்ப க்ஞானிகள் (Limited Knowledge) இந்த ஜகத்தை (ஜகத் விருட்சத்தை) முழுமையாக அறிய முடிவதில்லை. இப்போது, இன்று இப்படி இருக்கிறது என்று யோசித்துப் புரிந்து கொள்வதற்குள் அது வேறொரு வடிவை எடுத்து விடுகிறது. ஆகையால் இதை யாராலும் முழுமையாக அறிய முடிவதில்லை. உலகையும் இதில் உள்ள (தற்காலிக சுகத்தைத் தருகின்ற பொருட்களையும்) பார்த்து மயங்குவோர் இதற்குள்ளே, அந்தர்யாமியாக இருக்கின்ற, படைத்தல், காத்தல், அழித்தல் யாவற்றையும் செய்கின்ற இறைவனையும் யாரும் காண்பதில்லை. (அறிவதில்லை)

2. ஸம்ஸ்ருத மொழி ஒரு முழுமையான பாஷை. இந்த உலகத்தை ஜகத் என்கிறோம். ஜாயதே கச்சதே இதி ஜகத் என்பது இதன் பொருள். ஜாயதே எப்போதும் இடம் மாறிக் கொண்டே இருப்பது. கச்சதே எப்போதும் இன்றிருப்பது போல் நாளை இல்லாதிருப்பது.

3. இந்த ஜகத்துக்கு நாதன் (ஸ்வாமி) பரமாத்மா ஸ்ரீமத் நாராயணன் ஜகஸ்ய நாத : இதி ஜகந்நாத : (ஜகந்நாதன்)

4. வேற்று மத ஸித்தாந்திகள் ஸம்ப்ரவிஷ்ட : என்பதை ஸம்ப்ரதிஷ்டா என்று பாடம் செய்து ஜகத்மித்யை (உலகே மாயம் - பொய்) என்று பொருள் படுத்துகிறார்கள். மத்வ மதஸித்தாந்தம் இவ்வாறு பொருள் கொள்வதை ஆட்சேபிக்கிறது.

மந்த்ராலய மஹானின் கீதார்த்த ஸங்க்ரஹம், கோரக்பூர் பதிப்பு கீதை, சலாரி ஆச்சாரியார் புஸ்தகம் ஆகியவைகளில் ஸம்ப்ரவிஷ்ட : என்று பாடம் உள்ளது.

உலகத்தின் தன்மை, ஸ்வபாவம் (Nature) இவ்வாறானது என்று ஸ்ரீபகவான் விளக்கினார். அது சரி அதனால் அதைத் தெரிந்து கொண்டு நான் என்ன செய்யப் போகிறேன் (In what way this info. is useful to me ?) கேள்விக்கு விடை இதோ வருகிறது.

**அஸ்வத்த$^{2}$மேனம் ஸுவிரூ$_{4}$ட மூலம்**

**அஸங்க ஸஸ்த்ரேண த்$_{3}$ரு$_{4}$டேன சித்வா** ||3 (B) ||

தத : பத$_3$ம் தத் பரிமார்க்கி$^3$தவ்யம்

யஸ்மின் க$^3$தா: ந நிவர்த்தந்தி பூ$^4$ய :

தமேவ சாத்யம் புருஷம் ப்ரபத்$_3$யே

யத: ப்ரவ்ருத்தி : ப்ரஸ்ருதா புராணீ || 4 ||

3 (B) யின் அர்த்தம் பார்ப்பதற்கு முன்:-

அச்வத்த மரமாய் சித்தரிக்கப்பட்ட, அந்த உலகமாகிய மரத்தின் ஆணிவேர் போன்ற மஹா விஷ்ணுவானவர், மூலப்ரக்ருதி மற்றும் அதனின்று வந்த பல்வேறு (மஹத் போன்ற) தத்துவங்கள் ஆகியனவற்றிலிருந்து வேறானவர், இந்தப் பிரபஞ்சத்திலிருந்து வேறானவர், இந்தப் பிரபஞ்சம் ஜலப்பிரவாஹம் போன்று நித்யமானது. ஆனாலும் எப்போதும் மாறுதலடைந்து கொண்டே இருக்கும் என்றும், ஆராய்ந்து புரிந்து கொண்டு அதன்பின், -

அதன் பின்? அதன்பின் இன்னொரு விஷயம் ஞாபகம் வைத்துக் கொண்டு ஸ்லோகத்தின் அர்த்தத்தைப் பார்க்க வேண்டும்.

சுமார் 84 லட்சம் வகையான யோனிகளில் பிறந்து, கிருமிகள், புழுக்கள், பூக்கள், பூச்சிகள், மரம், செடி, கொடிகள், பறவைகள், விலங்கினங்கள் என்று எல்லாவித ஜன்மங்கள் எடுத்தபின் கிடைப்பது இந்த மனிதப்பிறவி.

இந்த மனிதப் பிறவியிலும் தற்போது இந்த பகவத் கீதை புஸ்தகத்தைப் படிப்பதற்கு முன் எத்துணை எத்துணை மனிதப் பிறவிகள் பிறந்தோமோ தெரியாது.

அது மட்டுமல்ல, இந்தப் பிறவிக்குப்பின் இன்னும் எத்தனை பிறவிகளோ அதுவும் தெரியாது. இன்னும் நல்ல பிறவிகளா அல்லது நீசப் பிறவிகளா எது கிடைக்கும் என்பதும் தெரியாது.

இப்படிப்பட்ட நிலையில் உள்ள நாம் இப்போது இந்த ஸ்லோகத்தின் அர்த்தத்தைப் பார்க்கப் போகிறோம்.

ஸ்லோகம் (3B) யின் அர்த்தம்:

என் மனைவி (அல்லது) என் கணவன், என் குழந்தைகள், என் வீடு, என் சொத்து, நகை, பணம், காசு சுகங்கள் ஆகிய இவை யாவும் (Compared to our long long journey) நிரந்தரமல்ல அவை அழியக் கூடியவை, மாறக் கூடியவை அல்லது இல்லாமல் போகக் கூடியவை, என்னும் க்ஞானத்தை (அறிவைப்) பெற்று இவற்றின் மீது பற்றின்மை (மோஹமின்மை) என்னும், அதாவது வைராக்கியம் என்னும் கோடரி (அல்லது அரிவாள்) ஆகிய ஆயுதத்தால், முதலில் கூறிய நன்கு வலுத்து வேரூன்றிய (விஷ்ணு முதலிய பல்வேறு வேர்களை உடைய) அஸ்வத்தம் என்னும் பெயர் கொண்ட இந்த மரத்தை வெட்ட வேண்டும்.

விஷ்ணு முதலிய பல்வேறு வேர்களை உடைய விருக்ஷத்தை கோடாலியால் நன்கு வெட்டிச் சாய்க்க வேண்டும் என்றால் என்ன அர்த்தம்? அந்த மரத்தில் பகவான், பிரம்மா, தேவதைகள், மஹாலக்ஷ்மி எல்லாரும் இருக்கிறார்கள் என்று கூறிவிட்டு மரத்தை வெட்டுங்கள் என்றால் எப்படி? என்ன பொருள்?

<u>விடை :</u> ஆரம்பத்தில் கூறியபடி இந்த ஜகத்தை, உலகத்தை ஓர் உருவகமாக இது ஒரு அஸ்வத்த மரம் "போன்றது" என்று கூறினார் பகவான். உடனே ஜகத்தை மறந்து விட்டு மரத்தை மட்டும் பார்க்காகாது. மரத்தை எப்படி கோடாலி கொண்டு வெட்டுகிறோமோ அதேபோல, இந்த ஜகத்தில், உலகத்தில் உள்ள விஷய சுகங்கள் மீது உள்ள பற்றுதலை, பற்றின்மை என்னும் கோடரி கொண்டு வெட்டிக் கொண்டு, பகவான் மீது மட்டுமே மனதைச் செலுத்த வேண்டும் என்பது பொருள். இனி இதன் தொடர்ச்சியாக ஸ்லோகம் 4ன் அர்த்தம் வருகிறது.

**<u>ஸ்லோகம் 4 : (அர்த்தம்)</u>**

யாரிடத்தில் (அல்லது) யாரை அடைந்தபின் ஜனங்கள் மறுபடியும் ஸம்ஸாரக் கடலில் வீழ்வதில்லையோ, மறுபடியும் கர்பத்தில் அவஸ்தைப்படும் துக்கத்தை அடைவதில்லையோ அப்படிப்பட்ட விஷ்ணு தேடத் தகுந்தவர். அவரை

ஸ்ரவணம், மனனம் ஆகிய பல்வேறு விதங்களில் பக்தி செய்து பூர்ண ஷட்குணமுடைய அந்த விஷ்ணுவை: எவரிடமிருந்து இந்த ஸம்ஸாரக்கடலும், பிரபஞ்சமும் பல்வேறு செயல்பாடுகளும் தொடர்கின்றனவோ அப்படிப்பட்ட ஸ்ரீமஹாவிஷ்ணுவைச் சரணமடைய வேண்டும்.

குறிப்பு :

1. மேற்படி ஸம்ஸார விருட்சத்தை வைராக்கியம் எனப்படும் பற்றின்மையாகிய கோடாலியினால் வெட்டிவிட்டு இதற்கான மூலகாரணமான ஸ்ரீவிஷ்ணுவைச் சரணமடைதல் வேண்டும்.

2. ஸ்ரவணம், மனனம் ஆகிய நவவித பக்திமுறைகளும், சரணமடைதலும், இந்த மரத்தை வெட்டுவதற்கான பல்வேறு உபாயங்கள்.

3. ஸ்லோகம் (3B)ல் அஸங்க ஸஸ்த்ரேண என்று கூறப்பட்டுள்ளது. இந்த அஸங்கம் என்பது ஸஸ்தரம் என்று பொருள். ஸஸ்த்ரம் - ஆயுதம் (கோடாரி) அஸங்கம் என்பது ஸங்கம் என்பதன் (opposite) - எதிர்மறைப்பொருள்.

4. ஸங்கம் - கூடுதல், சேர்தல். பற்று

அஸங்கம் - பிரிதல், பற்றின்மை

எதிலிருந்து பிரிதல்? விஷயங்களிலிருந்து பிரிதல், பிரிந்து இருத்தல்.

மனிதனுக்கு ஐம்புலன்கள் மூலம் பல்வேறு இன்பங்கள் கிடைக்கின்றன. இவற்றிற்கு ஐம்பொறிகள் விஷயங்களாக ஆகின்றன.இது எப்படி என்று இரண்டு உதாரணங்கள் மூலம் பார்ப்போம்.

ஒருவனுக்கு இனிப்புப் பொருட்கள் மிகவும் பிடிக்கும் என்று வைத்துக் கொள்வோம். ஒரு இடத்தில் நிறைய ஜாங்கிரிகள் மிக நேர்த்தியாகவும், சுவையாகவும் அடுக்கி வைக்கப்பட்டிருப்பதை அவன் பார்க்கிறான். அந்த மனிதன் ஜாங்கிரியைச் சுவைத்தது அவன் ஞாபகத்தில் வருகிறது. அந்த நினைப்பே அவனுக்கு பரம சுகமாக இருக்கிறது. உடனே அவன் மனதுக்கும் எதிரே உள்ள ஜாங்கிரிகளுக்கும் கூடுதல் (ஸங்கம்) ஏற்படுகிறது. மனது மூளைக்கு உத்தரவு போடுகிறது. மூளை கால்களுக்கும், கைகளுக்கும் உத்தரவு போடுகிறது. கால் நடந்து சென்று ஜாங்கிரி அருகே அவனைக் கொண்டு செல்கிறது.கைக்கு உத்தரவு வருகிறது. கை அந்த ஜாங்கிரியை எடுக்கிறது. வாய்க்கு எடுத்துச் செல்கிறது. வாய்க்கு உத்தரவு வருகிறது. வாய் ஜாங்கிரியை சுவைக்கிறது. மனம் மகிழ்கிறது. இத்துடன் கதை முடியவில்லை. அதிக அளவு ஜாங்கிரியை உண்டதால் அஜீர்ணம். டயாபடீஸ் உள்ளவன் ஆதலால் (Sugar) எகிறுகிறது. பிறகு டாக்டர் (Treatment), அவஸ்தை, வீட்டில் திட்டு இத்யாதிகள் எல்லாமே எங்கே ஆரம்பிக்கிறது? ஸங்கம் என்பதில் இருந்து, மனதுக்கும்

ஜாங்கிரிக்கும் ஏற்பட்ட ஸங்கம்.

அடுத்த உதாரணம் பெண் சுகத்துக்கு அலைவது. அல்லது டிவியில் மணிக்கணக்கில் உட்கார்ந்து சினிமா சீரியல் போன்றவற்றைப் பார்ப்பது. இவை எல்லாவற்றுக்குமே மூலகாரணம் மனதுக்கும், விஷய சுகங்களுக்கும் இடையே ஏற்படும் ஸங்கம் எனப்படும் தொடர்புதான். இந்தத் தொடர்பை அறுப்பது அஸங்கம். இந்த அஸங்கம் என்பதே வைராக்யம் என்னும் கோடாலி. இனிவரும் ஐந்தாவது ஸ்லோகத்தில் அந்த இறைவனை (விஷ்ணுவை) அடைவதற்கான வேறு ஸாதனங்களையும் கூறுகிறார்.

**நிர்மான மோஹா; ஜிதஸங்க$^{3}$தோ$^{3}$ஷா :**
**அத்$^{4}$யாத்ம நித்யா; விநிவ்ருத்த காமா : ||**
**த்$^{3}$வந்த்வை : விமுக்தாஸ் ஸுக$^{2}$து$^{3}$க்க$^{2}$ ஸம்ஜ்ஞை:**
**க$^{3}$ச்சந்தி அமூட$^{4}$ா பத$^{3}$மவ்யயம்தத் || 5 ||**

அஹங்காரமும், விபரீத க்ஞானமும் இல்லாதவர்களும், விஷய ஸுகங்களின் மீது பற்றின்றி (ஸங்கம் என்பதை வென்று, தோஷமில்லாதவர்களும்) அந்த விஷயாதிகளிலிருந்து அடையப்பெறும் தோஷங்கள் அற்றவர்களும், அவ்வாறு "அஸங்கம்" மூலமாக விஷய சுகங்களை விலக்கியவர்களும், ஸுக மற்றும் துக்கம் ஏற்படக் காரணமானவைகளான இரட்டைகளில் இருந்து

விடுபட்டவர்களும் ("இரட்டை" பற்றிய குறிப்பு கீழே காண்க) ஆகிய மேற்கூறிய எல்லா நற்பண்புகளும் கொண்டவர்களாக விளங்கும் மூடரல்லாதவர்கள் (க்ஞானிகள்) முன் சொல்லப்பட்ட (ஸ்லோகம் 4ல் சொல்லப்பட்ட) பரமபுருஷனான ஸ்ரீ மஹாவிஷ்ணுவை அடைகிறார்கள்.

<u>குறிப்பு :</u>

அஹங்காரம் என்றால் (தான் செய்யும்) எந்த ஒரு செயலையும் நான் செய்கிறேன், இது என்னால்தான் நடந்தது என்ற எண்ணம் சிறிதும் இல்லாதவர்கள். மந்த்ராலய மஹாப்ரபு ஸ்ரீ ராகவேந்த்ர ஸ்வாமிகள் ஒவ்வொரு மனிதனும் காலையில் எழுந்ததும் அன்று முழுவதும்தான் செய்யப் போகும் செயல்கள் யாவற்றையும் பகவத் அர்ப்பணமாக எப்படிச் செய்ய வேண்டும் என்பதை தமது "ப்ராதஸ் ஸங்கல்ப கத்யம்" என்னும் நூலில் அற்புதமாக விளக்கி இருக்கிறார். இந்த நூலும் மிக அற்புதமானது. அம்மன் சத்தியநாதன்அவர்களின் ஸ்ரீ அம்மன்பதிப்பகத்தார் தமிழில் இந்த நூலை ஆக்கி வெளியிட்டுள்ளனர். வாங்கிப் படித்துப் பயன் பெறுங்கள். இந்த நூலில் ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகள் கூறுவது:

ஸ்ரீநரஸிம்ஹாத்மக

பரமதயாளோ

க்ஷமா ஸமுத்ர

பக்த வத்ஸல

பக்த அபராத ஸஹிஷ்ணோ

தேச காலதிபதே

தேஹேந்த்ரியாதிபதே

ஸுர்ய வம்சத்வஜ

ரகுகுலதிலக

லக்ஷ்மண பரத சத்ருக்னாக்ரஜ

ஸ்ரீஹனுமத் உபாஸித சரண

ஸீதாபதே

ஸ்ரீராமசந்த்ர

(கொஞ்சம் மூச்சு வாங்கிக் கொள்ளுங்கள். இதுவரை பரமாத்மாவை பல்வேறு அடைமொழிகளால் விவரித்தார். இப்போது தான் செய்யப் போவதைச் சொல்கிறார். (கவனிக்கவும்) நான் செய்கிறேன் என்று சொல்லவில்லை. **உன்னால்** எல்லாம் செய்விக்கப்படுகிறது என்கிறார்.

தொடர்ச்சியாக,

த்வதாக்ஞயா (உன் ஆணையின்படி)

தவத் ப்ரேரணையா (உன் (Proposal) படி)

த்வத் ப்ரித்யர்த்தம் (உன் ப்ரீதிக்காக)

த்வாம் உத்திஸ்ய (உன்னையே உத்தேசித்து)

த்வாம் அனுஸ்மரன்யேவ (உன்னையே உன் யோஜனையையே அநுசரித்து)

............இனி நாள் முழுவதும் தாம் செய்யப் போகும் கார்யங்களை விவரிக்கிறார். அவை பக்கம் பக்கமாக போகும்....

இவ்வாறு, ஓர் உயர்ந்த க்ஞானி அஹங்காரம் இல்லாமல் இருப்பது எப்படி என்று நமக்குத் தெளிவாக காண்பித்துக் கொடுத்திருக்கிறார்.

2. விபரீதக்ஞானம் என்பது என்ன?

உண்மைப் பொருளை அறியாமல், தவறான ஒன்றை சரியென்று நம்பி, தனது நம்பிக்கையே சரியான அறிவு என்று எண்ணி இருத்தல். உலகம் மித்யை, இறைவன் நிர்க்குணன், நாராயணனுக்கும் மேலான தேவன் உண்டு என்றெல்லாம் எண்ணி அதை நம்புவது விபரீத க்ஞானம். இப்படிப்பட்டவர்கள் என்றென்றும் எந்தக் காலத்திலும் இறைவன் வாழும் பரமபதத்தை, மோட்சத்தை அடையவே முடியாது.

3. பரமாத்ம ஸ்வரூபத்தில் தமது மனதை உறுதியாக நிலை நிறுத்தியவர்கள், அத்யாத்ம நித்யா என்று குறிக்கப்பட்டனர்.

4. ஆவல், விருப்பம் சபலம் இவை எள்ளளவு கூட (தவறான விஷய சுகங்கள் மீது) இல்லாதவர்கள்

விநிவ்ருத்தகாமா என்று அழைக்கப்பட்டனர்.

5. இரட்டைகள் (த்வந்த்வை :) என்பது குளிர் - வெப்பம், வேண்டுதல் - வேண்டாமை, மானம் - அவமானம், புகழ்ச்சி - இகழ்ச்சி, சந்தோஷம் - வருத்தம் போன்ற இவ்வாறானவை. இவைகளில் ஒன்று கிடைத்தால் ஸுகமும், ஒன்று கிடைக்காவிட்டால் துக்கமும் ஏற்படுவது சாதாரணமானவர் மனோநிலை. இந்த இரட்டைகள் நம் மீது ஏற்படுத்தும் தாக்கத்தைப் பொறுத்துக் கொண்டு அவற்றால் ஏற்படும் ஸுகமோ - துக்கமோ இல்லாதபடிக்குச் செய்து கொள்வதற்கு மனதை நன்கு பழக்கிக் கொண்டவர்கள். இருமைகளை வென்றவர் என்று குறிப்பிடப்பட்டுள்ளனர்.

6. அவ்யயம் பதம் என்பது என்றும் அழிவற்ற நித்யமான பரமாத்மஸ்வரூபம்.

7. ஒரு முமுக்ஷு (ஸாதகன்) முக்தியோக்யமாய் உள்ளவன் மேற்படி பரமாத்ம ஸ்வரூபத்தை அடைய ஒரே ஸமகாலத்தில் (Simultaneously) செய்ய வேண்டியது என்னவென்றால் மனதில் அமைந்த மாசுகளை நீக்கப்பாடுபடுதல் அதே சமயம் பரமாத்மாவிடம் தீவிர நாட்டம் கொள்ளுதல் இரண்டையும் செய்தால் அந்த செயல்களின் பாங்கு எவ்வளவுக்கெவ்வளவு செம்மையடைகிறதோ அதற்கேற்ப அவன் விரைந்து பரிபக்குவமடைகிறான். அப்போது மேலோங்கி இருப்பது

பக்தி ஒன்றே. பரிபக்குவம் அடைந்தவனை இறைவன் தானாகவே வந்து தன் ஸ்வரூபத்தைக்காட்டி பரமபதத்துக்கு அழைத்துச் செல்கிறார்.

இவ்வாறாக கிடைக்கப்பெறும் பரமபுருஷனான மஹாவிஷ்ணுவின் ஸ்வரூபத்தை ஸ்ரீ பகவான் அடுத்த சுலோகத்தில் விளக்குகிறார்.

**ந தத் பா[4]ஸயதே ஸூர்யோ ந சசாங்கோ ந பாவக: |**
**யத்க[3]த்வா ந நிவர்தந்தே தத்தா[4]ம பரமம் மம || 6 ||**

<u>பொருள் :</u> அந்த பரமாத்ம (பரமபுருஷ) ஸ்வரூபத்தை சூரியன் பிரகாசிக்கச் செய்வதில்லை சந்திரனும் பிரகாசிக்கச் செய்வதில்லை. சூரிய, சந்திரர்களாலேயே முடியாத போது, அவர்களையும் விட சக்தி குறைவான அக்னியும் பிரகாசிக்கச் செய்வதில்லை. எந்த ஸ்வரூபத்தை அடைந்த (ஞானிகளான) ஜனங்கள் ஸம்ஸாரக்கடலில் திரும்ப வருவதில்லையோ அதுவே என்னுடைய (திவ்யமான) மேலான ஸ்வரூபம்.

விளக்கம்:

சூரியன் கண்களுக்கு அதிதேவதை. சந்திரன் மனதுக்கு அபிமானி தேவதை. அக்னி வாக்குக்கு அபிமானி தேவதை. சூரியன் என் ஸ்வரூபத்தை விளக்குவதில்லை என்று இறைவன் கூறுவது ஸாதாரண கண்களால் இறைவனைக் கண்டு விளக்க இயலாது என்று பொருள் கொள்ள வேண்டும். இவ்வாறே இறைவன் மனம், வாக்கு

இவைகளுக்கும் அப்பாற்பட்டவன்.

இதே கருத்தை கடோபநிஷத்தும் கீழ்க்கண்டவாறு கூறுகிறது.

**ந தத்ர ஸூர்யோ ப$^4$ாதி ந சந்த்$^3$ரதாரகம்**

**நேமா வித்$^3$யுதோ பா$^4$ந்தி குதோ (S) யமக$^3$தி : |**

**தமேவ பா$^4$ந்தமநுபா$^4$தி ஸர்வம்**

**தஸ்ய பா$^4$ஸா ஸர்வமிதம் விபா$^4$தி ||**

**(க.உ) || 2/2/15 ||**

மேலும் சூரியன், சந்திரன், அக்னி ஆகியோர் தத்தமது குணங்களை ஒளி, தண்மை, சூடு ஆகியவற்றை பரமாத்மாவிடமிருந்து அவனருளால் பெறுகின்றனர். ஆகையால் இறை சொரூபத்தைக் காண்பித்துக் கொடுக்க அந்த தேவதைகள் சக்தியற்றவர்கள். உதாரணத்துக்கு இருட்டில் ஒரு, அவசரத்துக்கு, ஆபத்துக்கு டார்ச் விளக்கு நம் கையில் இருந்தால் அதன் உதவியால் நாம் சுலபமாக நம் வேலையை முடித்துக் கொள்கிறோம். ஆனால் பகல் நேரத்தில் சூரியனை இந்த டார்ச் லைட் மூலம் பிரகாசப் படுத்த முடியுமோ? (Compared to) சூரியன் டார்ச் விளக்கு மிகவும் சக்திகுறைவானது. டார்ச் விளக்கு மூலம் சூரியனைப் பார்க்க முடியாது. அது போல பரமாத்மாவின் பிரகாசத்துக்கெதிரில் சூரியன் ஒரு டார்ச் லைட் போன்றவன் என்று காண்க.

இது வரை, ஸம்ஸார மரம் எப்படி என்று பார்த்தோம். அஹங்காரம், மமகாரம் வாஸனாமய கர்மங்கள் பந்தப்படுத்துவது என்று பார்த்தோம். இவற்றிலிருந்து விடுபட, உபாயம் பரமாத்மனைச் சரணடைவது என்று பார்த்தோம். இவ்வாறாகக் கட்டுப்படும் பந்தப்படும் ஜீவன் எப்படிப்பட்டவன்? கட்டை விலக்கும் பரமன் எப்படிப் பட்டவன்? இவர்களிடையே உள்ள சம்பந்தம் எப்படிப்பட்டது? முதலியவற்றை விளக்குவதற்காக ஸ்ரீ கிருஷ்ணர் முதலில் ஜீவனைப் பற்றி அடுத்த ஸ்லோகத்தில் கூறுகிறார்.

**மமைவாம்ஸோ ஜீவலோகே ஜீவபூ⁴த: ஸநாதந:**
**மந:ஷஷ்டா²நீந்த்³ரியாணி ப்ரக்ருதிஸ்தா²நி கர்ஷதி || 7 ||**

<u>அர்த்தம் பார்ப்பதற்கு முன்.</u>

1. அம்சம் என்பது இருவகைப்படும். அவையாவன :- ஸ்வரூபாம்சம், பி(Bhi)ன்னாம்சம்.

ஸ்வரூபாம்சம் என்பது மத்ஸ்ய கூர்ம போன்ற அவதாரங்கள் பரமாத்வாவின் ஸ்வரூபாம்சம் மூலத்தில் இருப்பது அத்தனையும் முழுமையாக ஸ்வரூபாம்சத் திலும் இருக்கும். பின்னாம்சம் உதாரணம் :- சூரியன் - மூலப்பொருள்.

மின்மினிப்பூச்சியின் ஒளி - பின்னாம்சம். ஒரு சிறு, ஒரே ஒரு மிகச்சிறிய ஒற்றுமை மட்டுமே உள்ளது பின்னாம்சம்.

இதைப் போல பல உதாரணங்கள் கொடுக்கலாம்.

தண்ணீர் (ஜலம் - அப்பு) என்று எடுத்துக் கொண்டால் ஸமுத்ரம் மூலம் என்றால் சிறு மழைத்துளி அல்லது ஒரு spoon தண்ணீர் பின்னாம்சம்.

**இப்போது ஸ்லோகத்தின் பொருள் :-**

(ஜீவலோகே) பிரம்மா முதல் கீழே உள்ள ஜீவர்களில் நித்யவஸ்துவான (சேதன வஸ்து) ஜீவன் என்பவன் என்னுடைய பின்னாம்சனே. என் அம்சமான அந்த ஜீவன் ஜடப் ரக்ருதியாலான அந்த தேகத்தினுள் இருக்கும் ஐம்புலன்கள் + மனது ஆகியன சேர்ந்த ஆறு இந்திரியங்களை இழுத்துக் கொள்கிறான். தேகத்தில் இருந்து கொண்டு விஷய சுகங்களை நோக்கி (மனதின் மூலம்) இழுத்துச் செல்கிறான். பரமாத்மா தேகத்தை விட்டு வெளியே செல்லும் போது அதே ஜீவன் இந்த ஆறு இந்த்ரியங்களின் அம்சங்களைத் தன்னுடன் இழுத்துக் கொண்டு (உடலை விட்டு வெளியே) செல்கிறான்.

**விளக்கம்:**

நமது ஸ்தூல சரீரத்துக்குள் (Physical Body) ஸுக்ஷ்மமான சரீரம் ஒன்று உண்டு.மனிதன் இறக்கும் போது ஜீவன் அல்லது ஆத்மா வெளியே செல்லும் போது இந்த லிங்க சரீரம் ஜீவனுடன் ஒட்டிக் கொண்டு வெளியே செல்கிறது. அப்போது ஐம்புலன்களின் சாராம்சம் (Motar Centres) மற்றும் மனம் ஆகியன இந்த லிங்க சரீரத்துடன் சேர்ந்தே செல்கிறது. இறைவனின் பிம்பதரிசனம்,

அபரோக்ஷக்ஞானம் ஆகியன ஜீவனுக்கு ஸித்தியாகும் போது லிங்கசரீரம் ஜீவனை விட்டு விழுந்து விடுகிறது. அதுவரை எத்தனை எத்தனை பிறவிகள் எடுத்தாலும் ஜீவனுடன் இந்த லிங்க சரீரம் சேர்ந்தே பயணிக்கும். லிங்க சரீரம் நீங்கிய பின் ஜீவன் பரமாத்மாவை அடைந்து பரமசுகானந்த மோட்ச சுகத்தை அடைந்து பாவ, புண்ணிய கர்மபந்தங்கள் இல்லாமல் என்றென்றும் மோட்சத்தில் வாழ்வான். இதை அடைவதே ஒவ்வொரு மனிதனுக்கும் குறிக்கோள் இதை எவ்வாறு அடைவது என்னும் வழிமுறைகளை உலகில் இந்து மதம் மட்டுமே (அதுவும் ஸ்ரீமத்வாச்சார்யரின் மத்வமதம் ஸரியான முறையில் ஸரியான வழியில்) காட்டிக் கொடுக்கிறது.

குறிப்பு :

1. பகவான் கீதையில் சில இடங்களில்இந்த்ரியங்கள் ஆறு என்றும் சில இடங்களில் பதினொன்று என்றும் கூறி இருக்கிறார். இந்த சுலோகத்தில் பஞ்சேந்த்ரியங்கள் என்னும் போது முக்கியமான க்ஞானேந்த்ரியங்களைக் குறித்தாலும் மற்ற ஐந்து கர்மேந்த்ரியங்களும் மேலே சொன்ன பஞ்சேந்த்ரியங்கள் மற்றும் மனம் இவைகளுக்குள் அடக்கம் என்று கொள்ள வேண்டும்.

2. ஒரு ஜீவன் தாயின் கர்ப்பத்தில் உடல் வளர்ச்சி கொள்ளும் போது, அந்த உடல் நிலம், நீர் என்னும் பஞ்ச பூதங்களால் ஆக்கப்படுகின்றன.

3.இந்த பஞ்ச பூதங்களின் மூலப்பொருள் ப்ரக்ருதி அல்லது மூலப்ரக்ருதி என்று தெரிந்து கொள்ள வேண்டும். இந்த மூலப்ரக்ருதிக்கு அபிமானி தேவதை ஸ்ரீமகாலட்சுமி.

4. ஸ்தூலமான அந்த (கர்பத்தில் உண்டாகும்) உடலுக்குள் இந்த்ரியாபிமானி தேவதைகளுடன் பரமாத்மா உட்புகுந்ததும் ஜீவன் அந்த உடலுக்குள் முக்யப்ராண தேவரின் உதவியுடன் இயங்க ஆரம்பிக்கிறான்.

5. பரமாத்மா நமது உடலிலிருந்து வெளியேறும் போது முக்யப்ராணரும் வெளியேறுகிறார். அப்போது ஜீவன் லிங்க சரீரத்துடன் இந்திரியங்களின் அபிமானி தேவதைகளுடன் வெளியேறுகிறான்.

6. ஸ்தூல சரீரத்தில் புலன்கள் என்று கண், காது, மூக்கு போன்றவை நம் கண்ணுக்குத் தெரிவது இந்த்ரிய உறுப்பு. இந்த உறுப்புக்குப் பின்னால் அந்தந்த உறுப்பின் அபிமானி தேவதைகள் புலன்களாக இயங்கினால் மட்டுமே அந்த உறுப்பு நமக்கு உபயோகமாகிறது. கண்ணுக்கு அபிமானி தேவதை வேலை செய்யாவிட்டால் physical கண் இருந்தாலும், அவனுக்கு கண்பார்வை தெரியாது. கண்வேலை செய்யாது. இது போல மற்ற இந்த்ரியங்களுக்கும் இதே rule தான். அடுத்ததாக, இந்த

இந்த்ரியங்களைப் பிரேரித்து இழுத்துக் கொள்ளுதல், எடுத்துச் செல்லுதல் ஆகியவற்றை ஜீவன் செய்வது அவனுடைய சொந்த செயலல்ல என்றும் இறைவனின் பிரேரணை மூலமே இவை நடைபெறுகின்றன என்றும் பகவான் ஸ்ரீகிருஷ்ணர் அடுத்த ஸ்லோகத்தின் மூலம் விளக்குகிறார்.

**சரீரம் யத³வாப்னோதி யச்சாப்யுத்க்ராமதீச்வர:**

**க்³ருஹீத்வைதானி ஸம்யாதி வாயுர்க³ந்தானி வாஸயாத் || (8) ||**

ஈச்வரனாகிய ஸ்ரீவிஷ்ணு ஜீவனின் தேகத்தை அடையும்போது ஜீவன் விஷ்ணுவால் பிரேரிக்கப்பட்டு இந்திரியங்களை இழுக்கிறான். அதே போல, எப்போது ஸ்ரீவிஷ்ணு ஜீவனின் தேகத்தை விட்டு ஜீவனை எடுத்துக் கொண்டு வெளியேறுகிறாரோ அப்போது, காற்றானது புஷ்பங்களிலிருந்து வாஸனைகளை எடுத்துக் கொண்டு செல்வது போல, அந்த ஜீவன் இந்த்ரியங்களின் அம்சங்களை (தன்னுடன்) எடுத்துக் கொண்டு போகிறான்.

<u>குறிப்புகள்:</u>

1. இந்த்ரியங்களைப் பிரேரிப்பது விஷ்ணுவின் அதீனத்தில் (Power Control) இருப்பதால் இந்த ஜகத் விருக்ஷத்தை வெட்டுவதற்கும் அதன் மூலம் மோக்ஷத்திற்கான உபாயத்தை அடைவதற்கும் ஜீவன் அந்த விஷ்ணுவையே

(ஸ்ரீஹரியையே) சரணடைய வேண்டும்.

2. ஸ்ரீ ராகவேந்திரர் தமது கீதார்த்த ஸங்க்ரஹம் என்னும் நூலில் இந்த்ரியங்களை ஓர் தேகத்திலிருந்து இன்னோர் தேகத்துக்கு எடுத்துச் செல்வது பரமாத்மா ஸ்ரீஹரியே என்றும் இது விஷயத்தில் ஜீவன் ஸ்ரீஹரியின் அதீனத்துக்குட்பட்டு செல்கிறான் என்றும் கூறி இருக்கிறார்.

3.ஸ்ரீவித்யாமாண்ய தீர்த்தர் தமது கீதை உரையில் இதே கருத்தைக் கூறி இருக்கிறார். (Ref.: Srimad Bhagavadgita - Sri Sri Vidyamanya Tirtha Swamiji - Translated by Sri H.L.Gururaj Rao-pp248.)

4. பரமாத்மா எங்கும் நிறைந்து இருப்பவன். ஆனால் ஜீவாத்மா (ஜீவன்) பரமாத்மாவின் ஒரு சிறு அம்சமே ஒழிய பரமாத்மாவே அல்ல. ஆகையால் ஸ்ரீஹரியின் அதீனத்துக்குட்பட்டு ஒரு உடலிலிருந்து இன்னொரு உடலுக்கு செல்கிறான். அப்போது தன்னுடன் இந்த்ரியங்களின் அம்சங்களையும் இழுத்துக் கொண்டு செல்கிறான் என்று பொருள் கொள்ள வேண்டும்.

5. இதே கருத்தை முன்னர் அத்யாயம் 2-ல் 22-ம் ஸ்லோகத்தில் இறைவன், மனிதன் பழைய ஆடைகளைக் களைந்து எறிந்து விட்டு (ஜீர்ணமான - பழைய - உபயோகமில்லாத ஆடைகளை எறிந்து விட்டு) புதிய ஆடைகளை அணிவது போல, (ஸாதனைகளுக்கு உபயோகமற்ற) பழைய உடலை விடுத்து, வேறு உடலை

அடைகிறான் என்று கூறி இருக்கிறார்.

இந்த தேகத்தில் இருக்கும் பரமாத்மா (தேகத்தில் இருக்கும்) இந்த்ரியங்களைக் கொண்டு, என்ன செய்கிறார் என்பது அடுத்த ஸ்லோகத்தில் விளக்கப்படுகிறது.

**ஸ்ரோத்ரம் சக்ஷு: ஸ்பர்ஸனம் ச ரஸனம் க்$_4$ராணமேவ ச |**
**அதிஷ்டா$_2$ய மநஸ்சாயம் விஷயாநுபஸேவதே || (9) ||**

பரமாத்மா விஷ்ணு (ஸ்ரீ ஹரி) ஜீவனின் காது, கண், தோல், நாக்கு, மூக்கு மற்றும் மனம் ஆகிய இந்த்ரியங்களைப் பிரேரிப்பவராக இருந்து கொண்டு அவ்விந்திரியங்களின் விஷயங்களான சப்தம் (இசை முதலியன பேச்சு முதலியன) ரூபம், ஸ்பர்சம் (தொடு உணர்ச்சிகள்) ரஸம் (சுவை) மற்றும் வாஸனை (Smell, aroma etc.) ஆகியவைகளின் ரஸத்தை (Essense) அநுபவிக்கிறார்.

<u>விளக்கம்:</u>

1. ஜீவன் மேலே கூறப்பட்ட விஷயங்களில் இருந்து கிடைக்கும் ஸுகம், துக்கம் (இன்பம், துன்பம்) ஆகியவற்றை அநுபவிப்பது போல் தோன்றினாலும் பரமாத்மன்தான் ஆத்மா, அந்தராத்மா என்னும் இரு ரூபங்களுடன் ஜீவர்களின் கர்மபலனின் ரஸத்தை (ஸாரத்தை - Essense) குடிக்கிறார். பாபகர்மங்களின் பலனைக் குடிப்பதில்லை.

2. ஸ்ரீமத் ஸத்யத்யான தீர்த்தர் தமது கீதாஸாரஸங்க்ரஹம் என்னும் பகவத்கீதை உரைநூலில் விஷயான் என்பதற்கு சுபவிஷயங்கள் என்று அர்த்தம் செய்து கொடுத்திருக்கிறார்.

3. அத்யாயம் 8/ ஸ்லோகம் 6,7 ல் இருபத்து நான்கு தத்துவங்களால் இந்த தேகம் (சரீரம்) செய்யப்பட்டுள்ளது என்பது விளக்கப்பட்டுள்ளது.

3.1 அவையாவன :

பஞ்சமஹாபூதங்கள் (நிலம், நீர்,நெருப்பு, வாயு, ஆகாயம்) - 5

(மஹத் + அஹங்கார) புத்தி, ஜடப்ரக்ருதி தத்வங்கள் - 3

இந்த்ரிய தத்வங்கள் (மனதுடன் சேர்த்து) - 11

இந்த்ரிய விஷயங்கள் ஓசை, சுவை, ஸ்பரிசம், ரூபம், வாஸனை ஆகிய - 5

ஆக 24 தத்வங்கள் (5+3+11+5)

இந்த இருபத்து நான்கு தத்வங்கள் க்ஷேத்ரம் அல்லது பகவானின் இருப்பிடம் எனப்படும்.

3.2 இந்த 24 தத்துவங்களையும் நியமிப்பவன்; அவற்றுள் இருந்து தர்மங்களை நடத்துபவன்; சம்பூர்ண ஞானம் உள்ளவன் ஆகிய நானே க்ஷேத்ரக்ஞன் என்று ஸ்ரீகிருஷ்ணன் கூறி இருக்கிறார்.

4. ஜீவனின் தேகத்தில் எப்போதும் பரமாத்மா

இருந்தாலும் தேகத்தின் தோஷங்கள் அவனைப் பற்றுவதில்லை. எனவே பரமாத்வை நாம் நிர்தோஷ ஞானானந்தாத்மா என்று கூறுகிறோம்.

அடுத்து, ஆத்மக்ஞானம் அடைந்தவர் மற்றும் அடையாதார் பற்றிக் கூறுகிறார்.

**உத்க்ராமந்தம் ஸ்தி₂தம் வாபி**
**பு₄ஞ்ஜாநம் வா கு₃ணாந்விதம் ।**
**விமூட₄ா நாநுபஸ்யந்தி பஸ்யந்தி**
**ஜ்ஞான சக்ஷுஷ: ।। (10) ।।**

இந்த ஸ்ரீவிஷ்ணு (நமது) தேகத்திலிருந்து ஜீவனை எடுத்துக் கொண்டு வெளியே செல்பவராக இருந்தாலும், (நமது) தேகத்திலேயே ஜீவனுடன் உறைந்து கொண்டிருந்தாலும், சுபகர்மங்களின் பலன்களின் ரஸத்தை அநுபவித்துக் கொண்டிருந்தாலும், அந்த பரமாத்மாவை மூடர்கள் (மதியற்றோர்) காண்பதில்லை. ஞானக்கண்களைப் பெற்ற, க்ஞானிகள் (அவனைக்) காண்கிறார்கள்.

**<u>விளக்கம்:</u>**

நாம் நமது உடலுக்குள் உறையும் பரமாத்வைக் காண முடியாமைக்கு நமதுஅக்ஞானமே காரணமாகும்.

**குறிப்பு :**

1. சாதாரணமாக எல்லா மனிதர்களும் தமக்குள்ளே இருக்கும் பரமாத்மனைக் காணமுடிவதில்லை.

மனதையும், இந்த்ரியங்களையும் நன்கு அடக்கியவர்கள் காணமுடியும் என்று ஸ்ரீஸ்ரீவித்யாமாண்ய தீர்த்தர் கூறி இருக்கிறார்.

2. அக்ஞானிகளுக்கு தமது ஸ்தூல உடலும்(Physical body) அந்த உடல், அந்த இந்த்ரியங்கள் மூலம் கிடைக்கும். இன்ப, துன்பங்கள் மட்டுமே காணக் கிடைக்கின்றன.

3. இந்த்ரியங்கள் புற உலகைப் பார்ப்பதற்காய் அமையும் போது அவைகளின் வசப்பட்டவர்கள் மூடாத்மாக்கள் ஆகின்றனர்.

4. திருவிழாக்கள் நடைபெறும் காலங்களில், பெரிய அளவு (Big Sized) பொம்மைகளுக்கு உள்ளே இருந்து கொண்டு ஒரு மனிதன் விளையாட்டுக் காண்பிக்கிறான். சிறு குழந்தைகள் அந்தப் பொம்மைகளே உண்மை என்று நம்பி கண்களை அகல விரித்துப் பார்க்கும் அறிவுடைய பெரியவர்களுக்கு (Adults) பொம்மை வேறு, உள்ளே இருக்கும் மனிதன் வேறு என்று தெரியும்.

5. அவ்வாறு, ஞானக்கண்கள் உடையவர்களுக்கு இந்த உடல் வேறு, ஜீவன் வேறு, இதனை ஆட்டிப் படைக்கும்அந்தராத்மா பகவான் வேறு என்று தெரியும்.

**யதந்தோ யோகி$_3$நஸ்சைனம்**
**பஸ்யந்த் யாத்மந்யவஸ்தி$_2$தம் ।**
**யதந்தோ ऽப்யக்ருதாத்மாநோநைநம்**
**பஸ்யந்த்யசேதஸ: || (11) ||**

ஞானம் அடைவதற்கான உபாயங்களை அறிந்த, ஞானோபாயத்தை ஆசரிப்பவர்கள் முயற்சி செய்து மேலும் ஞானத்தைப் பெற்று தமது தேகத்துக்குள் வீற்றிருக்கும் இந்த ஸ்ரீவிஷ்ணுவை தரிசிக்கின்றனர். அந்தக்கரண சுத்தமில்லாதவர்கள் முயற்சி செய்த போதிலும் இந்த பரமாத்வைக் காண முடிவதில்லை.

**குறிப்பு :**

1. இந்த ஸ்லோகத்தை 10ம் ஸ்லோகத்தின் விளக்கம் என்று கூறலாம்.

2. 10ல் விமூடா : என்று கூறப்பட்டவர்கள் மனதையும் இந்த்ரியங்களையும் அடக்க முயற்சி செய்தால் இறைவனைக் காண இயலும்.

3. ஆனால் இங்கு (11ல்) கூறப்பட்ட அசேதஸ: என்பவர்கள் ராஜஸ, தாமஸ குணங்களை உடையவர்கள். இவர்கள் முக்தியோக்யரல்லர். இவர்கள் முயற்சி செய்தாலும், அக்ஞானிகளாக இருக்கும் காரணத்தினால், அந்தாரத்மாவான இறைவனைக் காண இயலாது என்பது பொருள்.

4. அபௌருஷேயமான வேதங்களின் ஒரு பகுதியான கடோபநிஷத்தும் இதையே வலியுறுத்துகிறது.

**யஸ்த்வவிஜ்ஞானவான் ப$_4$வதி அமனஸ்க : ஸதாசுசி : |**
**பவதி நஸ தத் பதமாப்னோதி ஸம்ஸாரம் சாதிகச்சதி ||**
**கடோபநிஷத் (1-3-7)**

**பொருள் :**

விழிப்புணர்ச்சி அற்றவனும், அடங்காத மனத்தை உடையவனும், தூய்மை யற்றவனுமாக இருப்பவன் இறைவனை அறியமாட்டான். அவன் ஸம்ஸாரத்தில் (உலகியலில்) வீழ்கிறான்.

இனி வரும் ஸ்லோகங்கள் (12 முதல் 15 வரை) நான்கு ஸ்லோகங்களில் பரமாத்மனின் ஸ்வரூபம், ஐஸ்வர்யம், ப்ரபாவங்கள் முதலியன விளக்கப்படுகின்றன.

**யதா$_2$தி$_3$த்யக$_3$தம் தேஜோ ஜக$_3$த்பா$_4$ஸயதே ऽகிலம் |**
**யச்சந்த்$_3$ரமஸி யச்சாக்$_3$னௌ**
**தத்தேஜோ வித்$_3$தி$_4$ மாமகம் || (12) ||**

அகில உலகையும் பிரகாசிக்கச் செய்யும் ஒளி (தேஜஸ்) யாதுளதோ அதுவும்; மற்றும் சந்திரன், அக்னி, ஆகியோரிடம் உள்ள ஒளியும் என்னிடமிருந்து வந்ததாகவும், என்னுடைய அதீனமானதென்றும் அறிந்து கொள்.

**விளக்கம் :**

ஸ்ரீபகவான் 6வது ஸ்லோகத்தில் தன்னுடைய ஸ்வரூபத்தை விளக்கினார். அதில் ஒரு பகுதியின் முழுவிளக்கமே (detailed explanation) இங்கு வந்துள்ளது.

குறிப்பு :

1. சூரியன் நம் கண்களுக்கு அதிதேவதை. அவ்வாறே சந்திரன் நம் மனதுக்கும், அக்னி நமது வாக்குக்கும் தேவதை. இவர்களே நமது மேற்படி இந்த்ரியங்களின் பின்னிருந்து நாம் செய்யும் கர்மங்களுக்கு உதவியாய் இருக்கிறார்கள்.

2. ஆனால், இந்த தேவதைகளின் ஒளி (தேஜஸ், சக்தி)தமது ஒளியின் ஒரு சிறுதுளிதான் என்று இறைவன் விளக்குகிறான்.

3. ஆகையால் நாம் மற்றும் இந்த தேவதைகள் யாருமே ஸ்வதந்த்ரர்கள் அல்ல ; இறைவன் ஸ்ரீஹரியே ஸர்வதந்த்ர ஸ்வத்ந்த்ர என்பதும் அவனுக்கு உட்பட்டே நாம் நமது பல்வேறு காரியங்களையும் செய்கிறோம் என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். (நாஹம் கர்த்தா; ஹரி கர்த்தா ....) ஆகிய வாக்கியங்கள் கூறுவதும் இதுவே.

4. கடோபநிஷத்தில்(2:1:9) யமதர்மராஜன் நசிகேதஸுக்கு கீழ்க்கண்டவாறு கூறுகிறார்.

**யதச்தோதே$_3$தி ஸூர்யோ அஸ்தம் யத்ர ச க$_3$ச்சதி |**
**தம் தே$_3$வா: ஸர்வே அர்ப்பிதாஸ்தது$_3$ நாத்யேதி கச்சன |**
**ஏதத்$_3$ வை தத் ||**
**கடோபநிஷத் || (2.1.9) ||**

5. இதன் பொருள் :

யாரிடமிருந்து சூரியன் உதிக்கிறானோ, யாரிடம் சென்று

(பிரளய காலத்தில்) மறைகிறானோ அந்த இறைவனை எல்லா தெய்வங்களும் (தேவதைகளும்) போற்றுகின்றனர். அவரை மீறி யாரும் நடப்பதில்லை. நீ கேட்ட பொருள் அந்த இறைவனே (ஸ்ரீ ஹரியே)

அடுத்த ஸ்லோகம் :

**கா$_3$மாவிஸ்ய ச பூ$_4$தானி த$_4$ாரயாம்யஹமோஜஸா |**
**புஷ்ணாமி சௌஷதீ$_4$: ஸர்வா: ஸோமோ பூ$_4$த்வா ரஸாத்மக: || (13) ||**

நானே (பரமாத்மா) பூமியில் (காம் : Gaam-பூமி)

நன்கு உட்புகுந்து ஸமஸ்தப்ராணிகளையும் என்னுடைய ஸாமர்த்தியத்தால் தாங்குகிறேன். அம்ருத ரஸத்தின் சொரூபமான (அழகான) ஸோமன் என்ற பெயருள்ள சந்திரனாக ஆகி ஸமஸ்தமான ஓஷதிகளை (மரம், செடி, கொடி இத்யாதிகளை) புஷ்டியாக வளரச் செய்கிறேன்.

<u>குறிப்பு :</u>

1. எல்லா ஜீவர்களுக்கும் தேவையான உயிர்ச்சக்தி பரமாத்மாவிடமிருந்துதான் வருகிறது என்று பொருள்.

2. இலை, பூ, பழங்கள் முதலியவற்றைக் கொண்ட மரங்கள், செடிகள், கொடிகள், புல், பூண்டு பயிர் வகைகள் இவை அனைத்தும் ஓஷதிகள் என்று குறிக்கப்படுகின்றன.

3. மேற்கண்டவைகளுக்கு போஷண சக்தி ரஸத்மக ரூபனான சந்திரனிடமிருந்து கிடைக்கிறது. இந்த ரஸாத்மக சக்தியானது சந்திரனுக்கு இறைவன் தருகிறான் என்பது அர்த்தம்.

இறைவன் (ஸ்ரீஹரி) தன்னிடமுள்ள மற்றுமோர் வல்லமையை அடுத்த ஸ்லோகத்தில் விவரிக்கிறான்.

**அஹம் வைஸ்வாநரோ பூ₄த்வா**

**ப்ராணி நாம் தே₃ஹமாஸ்ரித: |**

**ப்ராணா பாநஸமாயுக்த: பசாம்யந்நம் சதுர்வித₄ம்**

**|| (14) ||**

நான் (பரமாத்மா) ஜீவர்களின் (14) உடலில் ஜாடராக்னியாக வைச்வாநரன் என்னும் நாமகனாகி (அவர்கள் தேகத்தை ஆச்ரயித்து) ; ப்ராணவாயு, அபானவாயு இவைகளுடன் கூடியவனாக பக்ஷ்யம், போஜ்யம், லேஹ்யம் மற்றும் பேயம் ஆகிய சதுர்விதமான உணவுப் பொருட்களை பக்குவப்படுத்தி ஜீரணம் செய்கிறேன்.

**குறிப்பு :**

1) உணவை ஜெரிக்கச்செய்து அந்த சக்தியை தேகம் முழுவதும் சென்றடையச் செய்து மனிதர்கள் பல்வேறு கர்மங்களை (Activities) செய்ய உதவுகிறேன் என்பது கருத்து.

2) நாம் சாப்பிடும் எல்லா உணவுப் பொருட்களும் நான்கு வகையாகப் பிரிக்கப்பட்டுள்ளன.

2.1 பக்ஷ்யம் : பற்களால் கடித்து, அரைத்து தின்னப்படும் கடினப் பொருட்கள் முறுக்கு,சீடை போன்றவைகள்.

2.2. போஜ்யம் : பற்களாலும், நாக்கினாலும் குழைத்துத் தின்னப்படும் பொருட்கள். அன்னம் (ஸாதம்) முதலியன.

2.3. லேஹ்யம் : பற்களுக்கு வேலையின்றி நாக்கினால் மட்டும் தின்னப்படும் பொருட்கள். தேன், ஹல்வா போன்றவை.

2.4. சோஷ்யம் (அல்லது) பேயம் : கரும்பு (சாறு) போன்றவைகளும், பழரஸங்கள்,பால், மோர் முதலியன.

3) மேற்படி நான்கு வித உணவுகளைத்தான் ஶ்ரீ கிருஷ்ணபகவான் அந்நம் சதுர்விதம் என்று கூறி இருக்கிறார்.

4. நாம் உணவு உண்பதற்கு முன் நெய்யால் ஹவிஹாரம் (நெய் ஓரிரு சொட்டுகள் ஸாதத்தின் மீது தெளித்தல்) செய்யப்பட்ட அன்னத்தை மந்திரம் சொல்லி பல்லில் படாமல் விழுங்கி நமது உடலுக்குள் இருக்கும் ப்ராண, அபான முதலிய ஐந்து முக்கிய வாயுக்களுக்கு ஸமர்ப்பணம் செய்கிறோம். ஆறாவது "ப்ரஹ்மன்" எனும் பரமாத்மனுக்கு அர்ப்பணம் மேற்படி ஐந்து பிராணன்களுக்கு பஞ்சப்ராணர்கள் என்று பெயர்.

4.1 பிராணன் : வாஸனை பார்ப்பது ருசி பார்ப்பது போன்ற செயல்களுக்கு அதிபதி.

4.2 அபானன் : நமது உடலுக்குத் தேவையற்ற மலம், வியர்வை, சளி போன்ற அழுக்குகளை வெளியேற்றும் கருவிகளுக்கு அதிபதி.

4.3 வியானன் : ஜீரண உறுப்புகளுக்கு அதிபதி.

4.4 உதானன் : ஜீரணிக்கப்பட்டு, உணவில் இருந்து கிடைக்கும் ஸத்துக்களை உடல் முழுவதும் ரத்தம் மூலம் ( செல்களுக்கு) பரப்பி எடுத்துச் சென்று சேர்ப்பிக்கும் கார்யத்தைச் செய்பவர்.

4.5 ஸமானன் : நமது எண்ணங்களை கட்டுப்படுத்துபவர். இவ்வைந்தைத் தவிர, முக்யப்ராணர் ஸதா ஸர்வகாலமும், உடலில் உயிர் இருக்கும் வரை ஸ்வாசம் செய்விப்பது, ஹ்ருதயத்தை இயங்கச் செய்வது போன்ற முக்ய வேலைகளை தன்னிச்சையாக நடைபெறச் செய்து கொண்டே இருக்கிறார்.

இவர்கள் எல்லோருமே தன் அதீனத்தில் தன்னால் வழி நடத்தப்படுகிறார்கள் என்று இறைவன் கூறுகிறார்.

5. சற்று யோசித்துப் பாருங்கள்.அபானன் வேலை செய்யாவிட்டால் constipation என்கிறோம். வ்யானன் வேலை செய்யாவிட்டால் indigestion என்கிறோம். பிராணன் வேலை செய்யா விட்டால் மந்தமாக இருக்கிறது. சாப்பாடே பிடிக்கவில்லை என்கிறோம்.

பரமாத்மனையும் மேற்படி பஞ்சப்பிராணர்கள், முக்யப்ராணர்கள் இவர்கள் யாவரையும் தினசரி தவறாது ஸ்மரணை செய்வது நமது கடமை. இது நமது ஆரோக்யமான வாழ்விற்கு வழி வகுக்கும்.

அடுத்த ஸ்லோகத்தில் ஸ்ரீ பகவான் தனது இன்னொரு முக்கியமான வல்லமையை (பிரபாவத்தை) விவரிக்கிறார்.

**ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி$_3$ ஸந்நிவிஷ்டோ**
**மத்த: ஸ்மருதிர்ஜ்ஞானமபோஹனம் ச/**
**வேதை$_3$ஸ்ச ஸர்வைரஹமேவ வேத்$_3$யோ**
**வேதா$_3$ந்த க்ருத்$_3$ வேத விதே$_3$வ சாஹம் || (15) ||**

(மேலும்) நான் எல்லோருடைய ஹ்ருதயத்திலும் நன்கு உறைபவன். என்னால் எல்லாப் பிராணிகளிடமும் க்ஞானம் (அறிவு, நினைவு), மறதி (மற்றும் விபரீதக்ஞானம்) ஆகியன உண்டாகின்றன. எல்லா வேதங்களினாலும், சொல்லப்படுபவன். வேதாந்தம் எனப்படும் பிரம்மஸூத்ரங்களைச் செய்தவன். மற்றும் நானே (நான் ஒருவனே) ஸமஸ்த வேதங்களையும் அவற்றின் முழுமையான அர்த்தங்களையும் அறிந்தவன்.

**குறிப்பு:**

1) இந்த பதினைந்தாம் அத்யாயத்தில் பதினைந்தாம் ஸ்லோகம் மிகவும் முக்யத்வம் வாய்ந்தது. இதனை நன்கு மனப்பாடம் செய்து ஸ்லோகத்தின் அர்த்தத்தையும்

தாத்பர்யத்தையும் நன்கு உள் வாங்கிக் கொண்டால் நமது ஆன்மீகப் பயணம் சுலபமாகவும், சுகமாகவும் அமையும் என்பது நூலாசிரியரின் திண்ணமான எண்ணம்.

2) அத்வைத, விசிஷ்டாத்வைதிகள் ஸ்ரீவேதவ்யாஸர் ஓர் மகரிஷி என்பதோடு விட்டுவிட்டு அவர் பரமாத்மனின் அவதாரம் என்பதைக் கூறுவதில்லை. இது ஓர் மகத்தான விஷ்ணுத்வேஷம். இந்த ஸ்லோகத்தின் மூலம் ஸ்ரீவேதவ்யாஸ தேவரும், ஸ்ரீக்ருஷ்ண பரமாத்மாவும், ஸ்ரீஹரியான நாராயணனும் ஒருவரே என்பது ஸ்பஷ்டமாக உறுதியாகிறது. (ஸ்ரீவேதவ்யாஸ தேவரே பிரம்மஸூத்ரத்தை எழுதியவர்)

3) மேலும் அதிக விவரங்கள் வேண்டுவோர் அடியேன் எழுதி வெளியிட்டுள்ள "க்ரந்தமாலிகா ஸ்தோத்ரம்" என்னும் புத்தகத்தைப் படித்துத் தெரிந்து கொள்ளவும்.

4. வேதங்களில், மற்ற தேவர்களையும், பல கர்மங்களையும் குறிக்கும். பதங்களும், ஸ்வரங்களும், எழுத்துக்களும் (Even துக்கீ, பத்தன் போன்ற வார்த்தைகளும்) ஸ்ரீஹரியையே (பரமமுக்ய விருத்தி மூலம்) கூறுகின்றன. இது பிரம்ம சூத்ரத்தில் முதல் அத்யாயத்தின் நான்கு பாதங்களிலும் நிரூபிக்கப்பட்டிருக்கின்றன.

(Thanks to) "ஸ்ரீமத்பகவத் கீதை" - Book Authored by கும்பகோணம் Shri.M.ராமராவ் published by அருள்மிகு

அம்மன் பதிப்பகம், திருவல்லிக்கேணி, சென்னை - 5. PP392)

5. இதற்கு (4ல் கூறியது) ஸமன்வய அத்யாயம் என்று பெயர். இதில் நிரூபிக்கப்பட்ட விஷயம் பரமாத்மா ஸ்ரீஹரி ஸர்வஸப்தவாச்யன் என்பதே ஆகும்.

6. பரமாத்மா ஸ்ரீஹரி இந்த அத்யாயத்தின் ஆரம்பத்தில் கூறியபடி இந்த ஜகத் முழுவதும் வியாபித்து இருந்தாலும் நமது ஹ்ருதயத்தில் என்றென்றும் எப்போதும் குடியிருக்கிறான் என்பது சிறப்பான இடத்தைக் குறிக்கிறது.

7. உதாரணமாக, கோயில் முழுவதும் பிரகாரங்கள், உள் மண்டபம், வெளி மண்டபம், அர்த்த மண்டபம், மஹாமண்டபம், பரிவார தேவஸ்தானங்கள் ஆகியன யாவும் மிகவும் பக்தியுடன் போற்றப்பட்டாலும், கர்ப்பக்ருஹத்தில் மூலஸ்தானத்தில் உறையும் இறைவனுக்கு இருப்பிடம் சிறப்பானதாக கருதப்படுவது போல என்றுணர்க.

8. இந்த ஸ்லோகத்தில் பகவான் க்ருஷ்ணர் உபயோகப்படுத்தியுள்ள சில முக்கியச் சொற்களின் கருத்தைக் காண்போம்.

8.1 **ஸ்ம்ருதி** (நினைவாற்றல்): நமது வாழ்வில்முன்னம் படித்த, கேட்ட, அறிந்த நிகழ்வுகள், பாடங்கள், கருத்துக்கள் ஆகியவற்றை நினைவுக்கு கொண்டு

வருதல் Computer பாஷையில் சொன்னால் recall memory.

8.2 **க்ஞானம்:** பல்வேறு பொருட்கள், இறைவன், தத்வங்கள் இவற்றின் உண்மைப் பொருளை (மெய்ப்பொருள்) அறிதல் க்ஞானம். இதற்கு நேர்மாறான பொருளை (அர்த்தத்தை) தெரிந்து கொண்டதாக நினைப்பது விபரீத க்ஞானம்.

8.2.1 க்ஞானம் மோக்ஷ ஸாதனம்.

8.2.2. விபரீதக்ஞானம் அந்தந்தமஸ் ஆகிய நரகங்களுக்கு வழி.

8.3 ஸந்தேஹங்கள், தவறான அர்த்தங்கள் (ஐயம், திரிபு என்பன) ஊஹனம். இதன் (opposite) எதிர்மறைச் சொல்தான், **அபோஹனம்.**

9. மேற்படி ஸ்ம்ருதி, ஞானம், அபோஹனம் ஆகியவற்றை மனிதர்கள் மனதில் உண்டாக்குவது நானே என்று இறைவன் கூறியுள்ளார் என்றறியவும்.

அடுத்து, சுலோகங்கள் 16 முதல் 20 வரை ஜீவர்கள், பரமாத்மா, புருஷோத்தமன் இவர்களிடையே உள்ள தொடர்பு ஆகியவற்றை விளக்கி இந்த பவித்ரமான புருஷோத்தம யோகம் என்னும் இந்த அத்யாயத்தை முடிக்கப் போகிறார்.

சுலோகம் 16ல் க்ஷர மற்றும் அக்ஷர புருஷர்கள் விளக்கம் வருகிறது.

**த்$_3$வாவிமௌ புருஷௌ லோகேக்ஷரஸ்ஸாக்ஷர ஏவ ச |**

**க்ஷர: ஸர்வாணி பூ$_4$தானி கூடஸ்தோ$_2$ऽக்ஷர உச்யதே || (16) ||**

இந்த உலகில் சேதனர்கள் எனப்படும் அறிவுள்ளவர்கள் இரண்டே வகையினர் க்ஷரமென்றும் (தேக நாசமுடையவர்கள்); அக்ஷரமென்றும் (தேக நாசமில்லாதவர்) கூறப்படுவர். சதுர்முகப் பிரம்மாவிலிருந்து ஆரம்பித்து எல்லா ஜீவராசிகளும் க்ஷரபுருஷர்கள். (கூடஸ்த :) ஆகாயம் போல் மாறுதல் இல்லாது இருக்கும் மஹாலக்ஷ்மீ தேக நாசமில்லாதவள்.

**விளக்கம்:**

மஹாலக்ஷ்மீ தாரதம்மியத்தில் (grade) சதுர்முகப் பிரம்மாவை விட பல்லாயிரம் மடங்கு பெரியவள். ஆண்கள் போன்று சக்தியுடைய ஸ்த்ரீ. பகவானின் கடாக்ஷத்தினால் தன் கடைக்கண்ணாலேயே உலகின் ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், பந்தம், மோக்ஷம் ஆகியவற்றை உண்டாக்கும் சக்தி படைத்தவள். ஆகையால் அக்ஷர புருஷன் என்று ஆண்பாலில் குறிக்கப்பட்டு இருக்கிறாள்.

**குறிப்பு:**

1. மஹாலக்ஷ்மீயையும் விட உயர்ந்தவர் ஒரே ஒருவர்தான். அது பரமாத்மா ஸ்ரீஹரி.

2. அவரைப் பற்றி பின்வரும் ஸ்லோகங்களில் பகவான் ஸ்ரீகிருஷ்ணர் கூறுகிறார்.

3. மத்வமத ஸித்தாந்தமல்லாது வேறு எந்தப் புத்தகங்களைப் படித்தாலும் க்ஷரன், அக்ஷரன் என்பதற்கு வேறு வேறு தவறான விளக்கங்கள் கொடுக்கப்பட்டிருக்கும்.

4. மத்வஸித்தாந்தத்தில் கொடுக்கப்பட்டிருக்கும்இந்த விளக்கத்திற்கு நிறைய பிரமாணங்கள் உள்ளன. (proof available) அவைகளை விளக்க இந்த சிறு நூலில் இடமில்லை.

5. ஸகலஜீவராசிகளையும் விட, சதுர்முகப்பிரம்ம தேவரையும் விட, மஹாலக்ஷ்மீயையும் விட உயர்ந்தவர் யார் என்பதற்கு அடுத்து வரும் ஸ்லோகங்கள் விடையளிக்கின்றன.

**உத்தம: புருஷஸ்த்வந்ய: பரமாத்மேத்யுதா$_3$ஹ்ருத: |**
**யோ லோகத்ரயமாவிஸ்ய பி$_3$ப$_4$ர்த்யவ்யய ஈஸ்வர: || (17)||**

உத்தம புருஷனான நான் (ஸ்ரீகிருஷ்ணன், பரமாத்மா) இந்த க்ஷர மற்றும் அக்ஷர புருஷர்களை விட வேறானவன். பரமாத்மா என்று ஸ்ருதி (வேதங்கள்) முதலியவைகளால் சொல்லப்படுகிறேன். (யு = எவன்) அப்படிப் பட்ட நான் (பரமாத்மா) மூன்று உலகங்களிலும் பிரவேசித்து ரக்ஷிக்கின்றவன். நாசமற்றவன். ஆகையால் (அந்தத் திறமையால், நாராயணன்)

**விளக்கம்:**

உலகங்கள் பிரளய காலத்தில் நாசமடையும் போது அவற்றில் பிரவேசித்த நாராயணன் நாசமடைவதில்லை.

**குறிப்பு:**

1. ஒரு வீடு தீப்பற்றி எரிந்து நாசமடைந்தாலும் அந்த வீட்டிற்குள் பிரவேசித்த அக்னிக்கு நாசமில்லை என்பது போலவே பகவானும் என்பது பொருள்.

2. இதே கருத்தை முன்னம் ஏழாம் அத்யாயம் ஏழாம் ஸ்லோகத்திலும் "மத்த: பரதரம் நான்யத், கிஞ்சிதஸ்தி தனஞ்ஜய" என்று பகவான் கூறி இருக்கிறார். அதாவது என்னைக் காட்டிலும் அதிக உயர்ந்த வஸ்து எதுவும் கிடையாது என்று அர்த்தம்.

3. ஹரி வம்சத்தில் கூறப்பட்டுள்ளதாவது:

ருத்ரம் ஸமாச்ரிதா தேவா ருத்ரோ ப்ரஹ்மாணமாச்ரிதா |
ப்ரஹ்மா மாமாச்ரிதோ நித்யம் நாஹம் கஸ்சிதுபாச்ரித: ||

எல்லா தேவதைகளுக்கும் ருத்ரதேவர் ஆச்ரயமானவர். (அவரைச் சரணடைந்து அவர் நிழலில் வாழ்கின்றனர்) சதுர்முகப் பிரம்மா ருத்ர தேவருக்கு ஆச்ரயமானவர். விஷ்ணுவாகிய நானே சதுர்முகப்ரம்மனுக்கு ஆச்ரயமானவன். எனக்கு மேல் ஆச்ரயமானவர் யாரும் என்றும் இல்லை என்பது பொருள்.

4. ஸ்ரீவேதவ்யாஸ தேவர் (ஸாக்ஷாத் ஸ்ரீமந்நாராயணனே இவர்) இயற்றிக் கொடுத்துள்ள

பிரம்மஸூத்ரம் என்கிற க்ரந்தத்தில் நான்கு அத்யாயங்கள் உள்ளன. (மொத்தம் 564 ஸூத்ரங்கள்) இவற்றில் முதல் அத்யாயம் ஸமன்வயாத்யாயம் என்று அழைக்கப்படுகிறது. இதில் 135 ஸூத்ரங்கள் உள்ளன. இந்த ஸூத்ரங்கள் யாவும் பரமாத்மா ஸ்ரீஹரியே இந்த உலகில் நிலவும் எல்லா சப்தங்கள், வார்த்தைகள், எழுத்துக்கள் மூலம் குறிக்கப்படுகின்றார் என்று நிரூபணம் செய்துள்ளன. (ஸ்ரீ ஹரியே ஸர்வ சப்த வாச்யன்) மஹாயோகா என்னும் முறைப்படி நிரூபணம் செய்யப்பட்டுள்ளது. ஆகையால் ஹரியே எல்லாரையும் விட உயர்ந்தவன்.

5. ஒரே ஒரு உதாரணம் பார்ப்போம். "இந்த்ர" என்னும் சொல் ஐஸ்வர்யங்கள் நிறைந்தவன் என்று சொல்கிறது. இது பொதுவாக தேவேந்திரனைக் குறிக்கிறது. ஆனால் உலகில் தேவேந்திரனாக இருந்தாலும் மற்றவர்கள் யாராக இருந்தாலும் அவர்களின் ஐஸ்வர்யங்களின் அளவை ஒரு குறிப்பிட்ட எல்லைக்குள் நிர்ணயம் செய்து விடலாம். ஆனால் ஸ்ரீஹரியின் ஐஸ்வர்யங்களை யாராலும் அளவிட முடியாது. ஆகையால் ஹரியே "இந்த்ரன்" என்னும் சொல்லால் குறிக்கப்படுகிறான் என்றாகிறது. இதற்கு மஹாயோக விருத்தி என்று பெயர்.

6. ஸ்ரீமத்வாச்சார்யர் ரிக்பாஷ்யம் என்னும் அதி உன்னதமான க்ரந்தம் செய்திருக்கிறார். ரிக்வேதத்தில்

இருந்து 40 ஸுக்தங்களுக்கு பாஷ்யம் செய்திருக்கிறார். இவற்றில் 4வது மற்றும் 5வது ஸுக்தங்களில் வேதம் இறைவனை இந்த்ர சப்தத்தால் குறிக்கிறது. பல்வேறு க்ரந்தங்களை மேற்கோள் காட்டி(quoting various authoritative scriptures) ஸ்ரீமதாச்சார்யர் இந்த்ர ஸப்தம் முழுக்க முழுக்க இறைவன் ஸ்ரீஹரியையே குறிக்கிறது என்று நிரூபணம் செய்திருக்கிறார்.

7. க்ஷரம், அக்ஷரம், ஈச்வர ஆகிய மூன்று தத்வங்களையும் ஸ்வேதாஸ்வதார உபநிஷத் (1/10) இவ்விதம் கூறுகிறது.

**க்ஷரம் ப்ரதா$_4$நமம்ருதாக்ஷரம் ஹர:**

**க்ஷராத்மாநாவீஸதே தே$_3$வ ஏக: |**

அதாவது க்ஷரபுருஷன், அக்ஷர புருஷன் ஆகிய இரண்டையும் அடக்கி ஆள்பவர் ஒரே தேவன் - அவனே புருஷோத்தமன்.

அடுத்த ஸ்லோகத்தில் இந்த புருஷோத்தமன் யார் என்பதை ஸ்ரீகிருஷ்ணபரமாத்மா விளக்குகிறார்.

**யஸ்மாத்க்ஷரமதீதோ ऽஹமக்ஷமக்ஷராத$_3$பி சோத்தம: |**
**அதோ ऽஸ்மி லோகே வேதே$_3$ ச ப்ரதித: புருஷோத்தம: || (18) ||**

எந்தக் காரணத்தினால் (அஹம் : நான் : ஸ்ரீக்ருஷ்ண பரமாத்மா = ஸ்ரீஹரி = ஸ்ரீமந் நாராயணன்) நான்

சதுர்முகப்பிரம்மா முதல் ஆரம்பித்து எல்லா ஜீவர்களையும் கடந்தவனாக (உயர்ந்தவனாக) இருக்கின்றேனோ, (எதனால்) மஹாலக்ஷ்மீயையும் விட உத்தமனோ அக்காரணத்தினால் பௌருஷேய க்ரந்தங்களிலும், அபௌருஷேயமான வேதங்களிலும் புருஷோத்தமன் என்று பிரஸித்தமானவாய் இருக்கிறேன்.

**குறிப்பு :**

1) (க்ஷரம் அதீதோ) பிரம்மா முதல் எல்லா ஜீவர்களும் க்ஷரம் என்றும் (அக்ஷராத் அபி) மஹாலக்ஷ்மீ அக்ஷரம் என்றும் குறிப்பிடப்பட்டதை முன்னே பார்த்திருக்கிறோம்.

2. பௌருஷேய க்ரந்தங்கள் : ஒருவரால் இயற்றப்பட்ட நூல்கள். மஹாபாரதம், புராணங்கள் போன்றவை. அபௌருஷேயமானவை, மனிதர்களாலோ, தேவர் களாலோ இயற்றப்படாத வேதங்கள் என்று பெயர். இவை எல்லாவற்றிலும் பரமாத்மனை புருஷோத்தமன் என்று புகழ்ந்து கூறப்பட்டிருக்கின்றன.

3. கண்டு ரிஷி என்று ஓர் பெரிய மகரிஷி இருந்தார். பரமாத்மனை மறவாமல் எப்போதும் பூஜித்துக் கொண்டு வாழ்ந்த மஹாதபஸ்வி. ஒரு சமயம் ஓர் அப்சரஸ் ஸ்த்ரீ மேல் மோஹம் கொண்டு அவளுடன் நீண்ட காலம் சுகித்துக் கொண்டு வாழ்ந்து வந்தார். திடீரென்று சுயப்ரக்ஞை வந்து கடந்த காலத்தைப் பார்த்த போது சுமார் ஆயிரம் ஆண்டுகள் காயத்ரீ ஸந்த்யா, பரமனின்

பூஜை யாவற்றையும் விட்டு விட்டு, பிராம்மணத்வ தகுதியை இழந்து விட்டோமே என்று பச்சாதாபப்பட்டு மிக வருந்தினார்.

இவர் மனமுருகி தனது தவறுக்கு வருந்தி இறைவனை ஸ்தோத்ரம் செய்த போது இறைவன் ஸ்ரீஹரி அவருக்கு தரிசனம் கொடுத்து, அவர் மீண்டும் அந்தணத் தகுதியைப் பெற்று மீண்டும் பூஜை, தவம் முதலியனவற்றைச் செய்தார்.

இவர் இறைவனைத் துதி செய்த ஸ்தோத்ரங்கள் இன்றும் நாம் தினசரி தேவ பூஜை செய்யும் போது தினசரி சொல்லப்படுகிறது. இதைச் சொல்வதனால் நமக்கு பூஜை செய்யும் தகுதி வருகிறது என்பது பாரம்பர்யமான ஐதீகம். இந்த ஸ்தோத்ரத்துக்கு "பிரம்ம பாரஸ்தோத்ரம்" என்று பெயர்.

4. இந்த பிரம்ம பாரஸ்தோத்திரத்தில் பிரசேதஸர்களுக்கு ஸ்ரீஸோமன் (சந்திரன்) கூறுவதாவது:

**பிரஹ்மாக்ஷர மஜம் நித்யம் யதாஸௌ புருஷோத்தம: |**
**ததா ராகாதயோ தோஷா: ப்ரயாந்து ப்ரசமம் மம ||**

இதன் பொருள் : பிரம்மபார ஸ்தோத்ரம் ஸ்லோகம் 4,5 இரண்டுக்கும்சேர்ந்த அர்த்தம் கீழ்க்கண்டவாறு:

விஷ்ணு, லக்ஷ்மீபதி அனந்த குணபூர்ணர், வேதமும் அவரே, ப்ரபஞ்சத்தில் அனைத்திலும்

(அந்தர்யாமி) உள்ளிருப்பவர், சதுர்முகன், ருத்ரன் முதலானோர்களை நியமிப்பவர் (எஜமானர்) அவரே.

சரீரத்தாலோ தேஸம், காலம், குணம் எவ்விதத்திலும் எப்போதும் நாஸமில்லாதவர். இவருடைய க்ஞானம் சிறிது கூட நாஸமில்லாதது. அனாதியானது. ஸாஸ்வதமானது. தோஷங்கள் எதிலும் சம்பந்தமில்லாதவர்.

பகவான் விஷ்ணு, புருஷோத்தமர், அப்பேர்ப்பட்டவரை ஸகலகுண பரிபூர்ணர், நாஸமில்லாதவர், உற்பத்தி இல்லாதவர் என்று அறிந்து கொள்ளும் எனது காமக்ரோதம் முதலிய தோஷங்கள் நாஸமடையட்டும்.

(Thanks to Shri Srimushnam V. Srininvasa Rao, Srirangam, Ref. : ஸ்ரீகுரு ஸார்வபௌம தமிழ் மாத இதழ் - pp 13)

5. இவ்விதம் பகவந்தனை புருஷோத்தமன் என்று அறிந்தவர்களின் இலக்கணம், அவர்களின் பெருமை என்ன என்பதை அடுத்து வரும் ஸ்லோகத்தில் கூறுகிறார்.

**யோ மாமேவ மஸம்மூடே$_4$ா ஜாநாதி புருஷோத்தமம்**
**ஸஸர்வித்$_4$ ப$_4$ஜதி மாம் ஸர்வபா$_4$வேன பா$_4$ரத || (19) ||**

அர்ஜுனா! எவனொருவன் சற்றும் ஐயமில்லாது என்னை (பரமாத்மா ஸ்ரீ ஹரியை) இவ்வாறு (க்ஷர மற்றும் அக்ஷர புருஷர்களைவிட உயர்ந்தவனான) புருஷோத்தமன் என்று அறிகிறானோ அவன் ஸகல ஸாஸ்த்ரங்களையும் அறிந்தவனாக ஆகிறான். அப்படிப்பட்ட ஜீவன் என்னை தந்தையென்றும், குரு என்றும், தெய்வம் என்றும், ரக்ஷகன் என்றும் இது போன்ற ஸகலவிதமான எண்ணங்களினாலும் என்னை ஆராதிக்கிறான்.

குறிப்பு :

1. இந்த ஸ்லோகத்தின் கருத்தையே கவிகுல திலகம் ஸ்ரீ த்ரிவிக்ரம பண்டிதாச்சார்யர் தமது "ஹரி வாயுஸ்துதி" யில் (14ம் ஸ்லோகத்தில்) ஸ்ரீவாயு தேவரை (முக்யப்ராணஸ்வாமியை) விளிக்கும் போதும் கூறுகிறார். ஸ்ரீமுக்யப்ராணரே! தாயே! தந்தையே! ஒப்பில்லாத குருவே (அதுல குரோ :) சகோதரரே! (ஆப்தபந்தோ) என் மீது மிகுந்த நேசம் கொண்ட உறவினனே! ஸ்ரீஹரியாகிய கோவிந்தன் மீதும், உங்கள் மீதும்எனக்கு பக்தி வருமாறு செய்து ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுதலை செய்வீராக என்று கூறுகிறார்.

2) ஸகல ஸாஸ்த்ரங்களிலும், ஸ்ரீக்ருஷ்ணனே (ஹரி, நாராயணன்) ஸர்வோத்தமன் என்று சொல்லியிருக்கிறபடியால் பரமாத்மாவே ஸர்வோத்தமன் என்று தெரிந்து கொண்டவன் ஸகல சாஸ்திரங்களையும்

தெரிந்து கொண்டவன் ஆகிறான். (ஸ்ரீஸ்ரீ ஸத்யத்யான தீர்த்தரின் விளக்கம்)

3) இந்தப் பதினைந்தாவது அத்யாயம் ஸ்லோகங்கள் 16 முதல் 20 வரை ஸர்வ ஸாஸ்த்ரார்த்த தாத்பர்யங்கள் என்று பெரியோர் கூறி இருக்கின்றனர்.

4) ஆகையினால், இந்த செய்யுட்களை ஸ்ரீமன் மத்வாச்சார்யர் தமது க்ரந்தங்களாகிய விஷ்ணு தத்வ விநிர்ணயம்,மாயாவாத கண்டனம், ஸதாசாரஸ்ம்ருதி ஆகிய நூல்களில் மேற்கோள்களாகக் காட்டி இருக்கிறார்.

5. ஐயம் திரிபு இல்லாமலும், விபரீதக்ஞானம் இல்லாமலும், மோஹம் (மயக்கம் – இதுவா அதுவா என்ற நிச்சயமற்ற தன்மை), சிறிதும் இல்லாமலும் பரமாத்மனை ஸர்வ வல்லமை படைத்த ஸாக்ஷாத் புருஷோத்தமன் என்று அறிதலே உண்மையான க்ஞானம் இதையே அஸம்மூட என்ற சொல் குறிக்கிறது.

6. ஸ்ரீமதாசார்யர் இயற்றிய அனுபாஷ்யம் ஸ்லோகம் (1-2)

**விஷ்ணுரேவ விஜிக்ஞாஸ்ய: ஸர்வகர்த்தா ssகமோதித: |**
**ஸமன்வயாதீக்ஷதேஸ்ச பூர்ணானந்தோ sந்தர: க(kh) வத் ||**

<u>பொருள் :</u>

மோக்ஷத்தை விரும்புகிறவர்கள் விஷ்ணுவையே உபாஸிக்க வேண்டும். அவரே எல்லாவற்றையும் உண்டாக்குபவர். சாஸ்திர முறைப்படி வேதங்களை

ஆராய்ந்தால் இவரே பரம்பொருள் என்பது விளங்கும். ஞானக்கண்ணால் நம் ஹ்ருதயத்தாமரையில் தர்சனம் செய்யத் தகுந்தவர் இவரே. இவரே பரிபூர்ணமான ஆனந்தமுடையவர். இவரே எல்லாப் பொருள்களுக்குள்ளும் இருப்பவர். எங்கும் பிரகாசிப்பவராதலால் ஆகாசம் என்று வேதத்தில் சொல்லப்படுபவர் இவரே.

7. இதேக்ரந்தம் ஸ்லோகம் (3-5)

உபாஸ்ய: ஸர்வவேதைஸ்ச ஸர்வைரபி யதா$_2$பலம் |
ஜ்ஞேயோ விஷ்ணுர் விசேஷஸ்து ஜ்ஞானே ஸ்யாதுத் தரோத்தரம் ||

பொருள் :

முக்திக்குத் தகுதியுள்ள ஜீவர்களால் ஸகல வேதங்களின் உதவியாலும் தன் தகுதிக்குத் தக்கவாறு விஷ்ணு அறியத் தகுந்தவர். ஞானம் ஏற ஏற பரமாத்மாவைப் பற்றிய அறிவும் அதிகமாக இருக்கும். ஜீவர்களின் உயர்வுக்குத் தகுந்தவாறு வேதார்த்த ஞானத்திலும் உயர்வு காணப்படும்.

8. அடுத்து வருவது பலஸ்ருதி ஸ்லோகம். மேலும் பரமரஹஸ்யமான இந்த உயர்ந்த சாஸ்திரம் தகுதியற்றவர்களுக்குக் கூறத்தக்கதல்ல என்று பகவான் கூறுகிறார்.

**இதி கு$_3$ஹ்யதமம் ஶாஸ்த்ரமித$_3$ முக்தம் மயாநக$_4$ |**
**ஏதத்$_3$ பு$_3$த்$_3$த்$_4$வா பு$_3$த்$_3$தி$_4$மான்ஸ்யாத் க்ருதக்ருத்யஶ்ச பா$^4$ரத ||**

**||20||**

பாவமற்றவனே! அர்ஜுனா!

இப்படியாக, இந்த சாஸ்திரம் (அதாவது பகவான் இந்த ஜகத்தின் வேர் போன்றும், அந்தர்யாமியாயும் இருத்தல், ஸர்வோத்தமனாய் இருத்தல், வேதங்களால் அறியப்படுபவனாய் இருத்தல் போன்றவை) கற்கத் தகுந்த உயர்வானது. என்னால் உனக்குக் கூறப்பட்டது. இவற்றையெல்லாம் நன்கறிந்தவன் அபரோக்ஷக் ஞானியாகவும், செய்யத் தகுந்தவற்றை ஸரியாய் செய்தவனாகவும் ஆகின்றான். (முக்தனாக ஆகின்றான்)

**<u>குறிப்பு :</u>**

1. மஹாலக்ஷ்மி, நான்முகன் மற்றும் ஸகல ஜீவர்களுக்கும், இறைவனுக்கும் இடையே உள்ள பேதம்; பரமாத்மனின் ஸர்வோத்தமத்வம், ஸர்வஜ்ஞத்வம்; ஜகத் உத்பத்தி கர்த்ருத்வம்; நியாமகத்வம்; ரக்ஷகத்வம் முதலான பகவானின் குணவிசேஷங்களைக் கூறும் இந்த ப்ரமேயம் (பதினைந்தாம் அத்யாயத்தில் கூறப்பட்ட சாஸ்திரம்)மிகவும் ரஹஸ்யமானது.

2. அதாவது, முக்தியோக்யர்கள் மட்டுமே அறியத் தகுந்தது. நம்பிக்கை இல்லாதவர்களுக்கும், தகுதி இல்லாதவர்களுக்கும் இதை விளக்கவோ, உபதேசம்

செய்யவோ கூடாது என்பது தாத்பர்யம்.

3. அர்ஜுனன் பாவமற்றவன். உள்ளத்தூய்மை உள்ளவன். ஆகையால் இந்த ரஹஸ்யத்தைக் கேட்டுக் கொள்ளவும், மனதில் நிலைநிறுத்திக் கொள்ளவும் யோக்யதை உள்ளவன். அதனால்தான் இதை உனக்குச் சொன்னேன் என்பதை பகவான் அர்ஜுனனை "அநக" என்னும் சொல்லால் விளித்து கூறும் போது அறிவுறுத்துகிறார்.

4. இத்தகைய க்ஞானமே மோக்ஷஸாதனம். இதுவே அபரோக்ஷ க்ஞானத்துக்கு வழிவகுக்கும். அர்ஜுனனைப் போல நாமும் உள்ளத்தைத் தூய்மைப்படுத்திக் கொண்டு, பாவங்களைச் செய்வதை முழுமையாக நிறுத்திக் கொண்டால் இந்த (பதினைந்தாம் அத்யாய) கீதா சாஸ்திரம் நமது மனதிலும் நின்று நிலைபெற்று பிறவிப் பெருங்கடலைத் தாண்ட உதவும்.

5. அத்யாயம் 9க்கு ராஜவித்யா, ராஜகுஹ்யயோகம் என்று பெயர். அந்த அத்யாயத்தில் முதல் ஸ்லோகத்தில் (9-1) எதை அறிந்தால், ஸம்ஸாரப் பெருங்கடலிருந்து விடுபட்டு, விசேஷமான, அறியத்தகுந்த க்ஞானத்தை உனக்கு, (தோஷங்கள் இல்லாதவனே உனக்கு) நன்கு கூறுகிறேன் கேள் என்று ஆரம்பிக்கிறார் ஸ்ரீகிருஷ்ண பகவான்.

6. இந்தப் பதினைந்தாம் அத்யாயத்தில் (இதி குஹ்யதமம் சாஸ்த்ரம்) உயர்ந்த இவ்வாறான சாஸ்த்திரம் உனக்கு கூறினேன் என்று முடிக்கிறார்.

7. க்ருதக்ருத்ய என்றால் அனைத்து (சாஸ்த்ரோக்தமான ஆன்மீகக்) கடமைகளையும் முழுமையாக ஆற்றி எல்லாவற்றின் பயனையும் பெறுவது என்பது பொருள். செய்ய வேண்டியதைச் சரியாய்ச் செய்தவனாக ஆவாயாக என்று பகவான் நமக்கு உபதேசிக்கிறார்.

8. மேலே 7ல் கூறப்பட்ட செய்ய வேண்டியவைகள் என்ன? அவற்றை சரியாகச் செய்வது எப்படி? என்னும் கேள்விகளுக்கு ஸ்ரீமத்வாச்சார்யர் விடை கொடுத்திருக்கிறார்.

9. எப்படியெனில் ஸ்ரீமத்வர் இயற்றிய கிரந்தங்களில் (மொத்தம் 37) ஸதாசார ஸ்ம்ருதி என்னும் க்ரந்தம் உள்ளது. இதில் ஒரு மனிதன் காலையில் தூக்கத்தில் இருந்து எழுந்ததிலிருந்து இரவு படுக்கையில் படுத்து தூங்கும் வரை செய்ய வேண்டிய எல்லா நற்காரியங்களையும் பட்டியலிட்டு அவை எவ்வாறு சாஸ்த்ரோக்தமாக செய்ய வேண்டும் என்பதையும் விளக்கி இருக்கிறார்.

10. இரண்டாவதாக "ஸ்ரீக்ருஷ்ணாம்ருத மஹார்ணவம்" என்னும் கரந்தம் ஸ்ரீக்ருஷ்ணன் என்னும் அமிர்தத்தாலான ஸமுத்ரம் என்பது பொருள். இந்தக் க்ரந்தத்தில் கார்யங்கள் சாஸ்த்ரோக்தமாக இருப்பதுடன் பக்தி பா (Bha) வத்துடனும் அர்ப்பண புத்தியுடனும் எவ்வாறு செய்வது என்பதை விளக்கி இருக்கிறார்.

11. மேற்படி இரண்டு நூல்களும் தமிழ், ஆங்கில மொழியிலும் மொழி பெயர்க்கப்பட்டு வெளியிடப்பட்டுள்ளன. படித்துப் பயனடைவீர்களாக.

12. வேதாந்தத்தின் ஸாரம் முழுவதும் இந்த பதினைந்தாவது அத்யாயத்தில் இருப்பதால் இந்த அத்யாயமே சாஸ்த்ரம் என்று பெயர் பெற்றது.

இவ்வாறாக ஸ்ரீக்ருஷ்ணன், அர்ஜுனன் இடையே ஸம்வாதமாக நடைபெற்ற கீதா சாஸ்திரத்தின் பதினைந்தாம் அத்தியாயம் முடிவுற்றது.

"ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து"



# கீதா மஹாத்மியம்

(தொடர்ச்சி..)

கீதா சாஸ்திரம் (பதினைந்தாம் அத்யாயம்) படிப்பதற்கு முன் கீதா மஹாத்மியத்தை ஒரு கதையாகப் படித்தோம். இப்போது அந்தக்கதை இந்த சாஸ்திரத்திற்கு எவ்வாறு பொருந்தி வருகிறது என்பதைப் பார்ப்போம்.

இந்த ஜகத்தையே ஒரு அஸ்வத்தம் என்று (அஸ்வத்தமரம், குதிரை போன்று சஞ்சலமானது) பார்த்தோம். அஸ்வரூபமான குதிரையின் கதை இதற்குப் பொருத்தமாக உள்ளது. சேநாதிபதிக்கு அரசன் நியாமகன். ஜகத்துக்கு பரமாத்மா நியாமகன்.

நியாமகனை மீறி - அஸ்வதந்த்ரன் எதுவும் செய்ய முடியவில்லை.

ஸ்வாமியை (தன் எஜமானனை) சுமந்த புண்ணியத்தால் அவனிடமிருந்தே கீதையைக் கேட்கும் யோகம் சேநாதிபதிக்குக் கிடைத்தது. குதிரை தன் யஜமானனை சுமந்தது போல ; ஸ்வாமியான பகவந்தனை நம் மனதில் (ப்ரீதியுடன்) நாம் சுமந்தால் நமக்கும் கீதையைக் கேட்கும் யோகம் வாய்க்கிறது.

**சந்தாம்ஸி யஸ்ய பர்ணானி;** பனைமரத்தின் இலையே பனை ஓலை. அதை அரசனிடம் சேர்ப்பித்தது வாயு தேவர். நமக்கும் கீதா ரஹஸ்யத்தை நன்கு உணர வைத்தவர் (வாயு தேவரான) ஸ்ரீமத்வாச்சர்யர். அரசனிடம்

வாள் இருந்தது. (கதைச் சுருக்கத்தில் நான் இதைப் பற்றி எழுதவில்லை.) சாதகர்களுக்கும் வைராக்யம் என்பதே ஆயுதம். அஸங்கமே சாதகர்களுக்கு ஆயுதம். அரசனுக்கு விஷ்ணு சர்மா என்ற முனிவர் மூலம் கீதை கிடைத்தது. நமக்கு ஸ்ரீ வியாஸ முனிவரிடமிருந்து (வியாச பகவான்) கீதை கிடைத்துள்ளது.

அரசன் பாறை மீது ஏறி நின்று கீதையைப் பெற்றான். அதே போல ஜீவன் ஸம்ஸார சுகதுக்கங்களுக்கு அசைந்து கொடுக்காமல் (React செய்யாமல்) பாறை போல ஸாதனைகளின் மேலேறி நின்றால் கீதா சாஸ்திரம் அவனுக்கு கை கொடுக்கும். (மோக்ஷ ஸாதனமாகும்)



# நன்றி !

இந்த நூலை அடியேன் எழுதி முடிக்கப் பேருதவியாக இருந்த வேறு நூல்களின் அகராதி. (Bibliography) இந்த நூல்களின் ஆசிரியப் பெருமக்கள், அச்சிட்டு வெளியிட்டோர் ஆகியோருக்கு எனது மனமார்ந்த நன்றி!


1. ஸ்ரீபகவத்கீதா – கீதாஸாரஸங்க்ரஹம் – ப்ரதிபதார்த்த – தாத்பர்ய– விசாரங்களுடன் கூடியது.ஸ்ரீமத் உத்திராதி மடாதீஸர் ஸ்ரீமத் ஸத்யத்யான தீர்த்த ஸ்ரீபாதங்களவர்கள் இயற்றியது. தமிழில் மொழி பெயர்த்து வெளியிட்டவர். ஸத்யானந்தம் கிருஷ்ணாச்சார்யர். வெளியீடு: (1937) ஸ்ரீமன் மத்வ ஸித்தாந்த அபிவ்ருத்திகாரிணீ ஸபையார்.

2. ஸ்ரீமத்பகவத்கீதை – ஸ்ரீஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகளின் கீதார்த்த ஸங்க்ரஹத்தைத் தழுவிய தமிழாக்கம் – கும்பகோணம் ஸ்ரீ M.ராமராவ் வெளியீடு. ஸ்ரீ அம்மன் ஸத்யநாதன் – அருள்மிகு அம்மன் பதிப்பகம்.

3. Srimad Bhagavad Gita - பாலிமாரு மடாதீசர் ஸ்ரீஸ்ரீவித்யா மாண்ய தீர்த்த ஸ்வாமிஜி அருளியது. - English Translation & Published by Dr. H.L. Gururaja Rao.

4. கீதா மஹாத்ம்யம் - எழுதியவர் டாக்டர். வ்யாஸனகெரெ ப்ரபஞ்ஜனாச்சார்ய - வெளியீடு : ஸ்ரீவ்யாஸ மத்வ ஸம்ஸோதன ப்ரதிஷ்டானம்; பெங்களூரு - 19.

5. கீதையில் உள்ள மறைந்த மாணிக்கங்கள் - எழுதியவர். ஸ்ரீ.டி.எஸ்.ராகவேந்திரன் அட்வகேட், கோயமுத்தூர்.

6. ஸ்ரீமத்பகவத்கீதா - தத்வவிவேசனீ - தமிழ் விரிவுரை - ஸ்ரீஜயதயால் கோயந்த்கா - வெளியீடு. கீதாப்ரஸ்,கோரக்பூர் - 273 005.

7. ஸ்ரீமத் பகவத்கீதை - ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்களின் வியாக்கியானம் - ஸ்ரீராமகிருஷ்ண தபோவனம்; திருப்பராய்த்துறை - திருச்சி மாவட்டம்.

8. ஸபா ஸார ஸங்க்ரஹம் (தமிழ்) - ஸ்ரீ 1008 ஸ்ரீ ஸத்யத்யான தீர்த்த ஸ்ரீபாதங்கள் (Vol - 1 & 2) தமிழாக்கம் வி.சேஷகிரிராவ் M.A., Published by விஸ்வ மாத்வ பரிஷத், உத்தராதிமடம், ஜயதீர்த்த வித்யா பீடம், பெங்களூர் - 4.

9. ஸ்ரீமத் அணுபாஷ்யம் - தமிழ் மொழி பெயர்ப்பு ஸரஸகவி ஆர். அப்பண்ணாச்சார் ... ஸ்ரீ புருஷோத்தம N.S.ரங்காச்சார்யார், கும்பகோணம் (1961)

10. HARI : PARATHARA : (Hari is Supreme) - Sanskrit / English by Shri. T.S. Raghavendran, Advocate, Coimbatore. Published by S.M.S.O. Sabha, Tirupati.

11. SATHYAM JAGATH (World is Real) - Sanskrit / English by Shri. T.S. Raghavendran, Advocate, Coimbatore. Published by S.M.S.O. Sabha, Tirupati.

12. கடஉபநிஷதம் - Sanskrit / Tamil சுவாமி ஆசுதோஷானந்தர் Published by ஸ்ரீராமகிருஷ்ண மடம். மயிலாப்பூர், சென்னை - 600 004.

13. ஸ்ரீமன் மஹாபாரத தாத்பர்ய நிர்ணயம் - தமிழ் - முதல் பாகம் - குரோம்பேட்டை ஸ்ரீ ஆர்.ஸ்ரீதரன் - Published by குரோம்பேட்டை மாத்வ ஸேவா டிரஸ்ட், சென்னை- 600 044.

14. ஸ்ரீஹரிவாயுஸ்துதி - மூலம் தமிழில் மற்றும் தமிழாக்கம், தமிழ்ச் செய்யுள் வடிவம், பதவுரை மற்றும்

சிறப்புக் குறிப்புகளுடன், B. Raghavendran,Published by Author, Ambattur, Chennai - 600 053.

15.ஸ்ரீமத்வ மதஸித்தாந்த ஸாரம் - தமிழ் B. Raghavendran,Published by Author, Ambattur, Chennai - 600 053.

16.ஸ்ரீகுரு ஸார்வ பௌமம்,தமிழ் ஆன்மீக மாத இதழ் (March 2011 Issue) Published by ஸ்ரீராகவேந்திரஸ்வாமி மடம், மந்த்ராலயம் Kurnool (Dt.) Andhra Pradesh.

17. ஸ்ரீமத் பகவத்கீதை - உரை ஆசிரியர் "அண்ணா" Published by ஸ்ரீராமகிருஷ்ணமடம், சென்னை-4.



# அநுபந்தம்

## ஸ்ரீமத் பகவத் கீதை பதினைந்தாம் அத்தியாயம்

ஊர்த்4வமூலம் அத4ஸ் SCசாகம்,
அஸ்வத்த2ம் pப்ராஹுரவ்யயம்
2சந்தாம்ஸி யஸ்ய பர்ணானி
யஸ்தம் வேத3ஸ வேத3வித் || 1 ||

அதஸ்சோர்த்த4வம் ப்ரஸ்ருதாஸ்தஸ்ய சாகா
கு3ணப்ரவ்ருத்4தா3 விஷயப்ரவாலா:
அத4ஸ்ச மூலான்யனுஸந்ததானி
கர்மானுப3ந்தீனி மனுஷ்யலோகே || 2 ||

ந ரூபமஸ்யேஹ ததே2ாபலப்4யதே,
நாந்தோ நசாதீ3ர் நச ஸம்ப்ரவிஷ்ட: (3A)

அஸவத்த2மேனம் ஸுவிரூட4 மூலம்
அஸங்க ஸஸ்த்ரேண த்3ரு4டேன சித்வா ||3 (B) ||

தத : பத3ம் தத் பரிமார்க்கி3தவ்யம்
யஸ்மின் க3தா: ந நிவர்த்தந்தி பூ4ய :
தமேவ சாத்யம் புருஷம் ப்ரபத்3யே
யத: ப்ரவ்ருத்தி : ப்ரஸ்ருதா புராணீ || 4 ||

நிர்மான மோஹா; ஜிதஸங்க3தோ3ஷா :
அத்4யாத்ம நித்யா; விநிவ்ருத்த காமா : ||
த்3வந்த்வை : விமுக்தாஸ் ஸுக2து3க்க2 ஸம்ஜ்ஞை:
க3ச்சந்தி அமூட4ா பத3மவ்யயம்தத் || 5 ||

ந தத் பா4ஸயதே ஸூர்யோ ந சசாங்கோ ந பாவக: |
யத்க3த்வா ந நிவர்தந்தே தத்தா4ம பரமம் மம || 6 ||

மமைவாம்ஸோ ஜீவலோகே ஜீவபூ4த: ஸநாதந:
மந:ஷஷ்ட2ாநீந்த்3ரியாணி ப்ரக்ருதிஸ்த2ாநி கர்ஷதி || 7 ||

சரீரம் யத3வாப்னோதி யச்சாப்யுத்க்ராமதீச்வர:
க்3ருஹீத்வைதானி ஸம்யாதி வாயுர்க3ந்தானி
வாஸயாத் || (8) ||

ஸ்ரோத்ரம் சக்ஷு: ஸ்பர்ஸனம் ச ரஸனம் க்4ராணமேவ ச |
அதிஷ்டா2ய மநஸ்சாயம் விஷயாநுபஸேவதே || (9) ||

உத்க்ராமந்தம் ஸ்தி2தம் வாபி
பு4ஞ்ஜாநம் வா கு3ணாந்விதம் |
விமூட4ா நாநுபஸ்யந்தி பஸ்யந்தி
ஜ்ஞான சக்ஷுஷ: || (10) ||

யதந்தோ யோகி$_3$நஸ்சைனம்
பஸ்யந்த் யாத்மந்யவஸ்தி$_2$தம் |
யதந்தோ ऽப்யக்ருதாத்மாநோநைநம்
பஸ்யந்த்யசேதஸ: || (11) ||

யதா$_2$தி$_3$த்யக$_3$தம் தேஜோ ஜக$_3$த்பா$_4$ஸயதே ऽகிலம் |
யச்சந்த்$_3$ரமஸி யச்சாக்$_3$னௌ
தத்தேஜோ வித்$_3$தி$_4$ மாமகம் || (12) ||

கா$_3$மாவிஸ்ய ச பூ$_4$தானி தா$_4$ரயாம்யஹமோஜஸா |
புஷ்ணாமி சௌஷதீ$_4$: ஸர்வா: ஸோமோ பூ$_4$த்வா ரஸாத்மக:
|| (13) ||

அஹம் வைஸ்வாநரோ பூ$_4$த்வா
ப்ராணி நாம் தே$_3$ஹமாஸ்ரித: |
ப்ராணா பாநஸமாயுக்த: பசாம்யந்நம் சதுர்வித$_4$ம்
|| (14) ||

ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி3 ஸந்நிவிஷ்டோ
மத்த: ஸ்மருதிர்ஜ்ஞானமபோஹனம் ச/
வேதை3ஸ்ச ஸர்வைரஹமேவ வேத்3யோ
வேதா3ந்த க்ருத்3 வேத விதே3வ சாஹம் || (15) ||

த்3வாவிமௌ புருஷௌ லோகேக்ஷரஸ்ஸ்சாக்ஷர ஏவ ச |
க்ஷர: ஸர்வாணி பூ4தானி கூடஸ்தோ2ऽக்ஷர உச்யதே || (16) ||

உத்தம: புருஷஸ்த்வந்ய: பரமாத்மேத்யுதா3ஹ்ருத: |
யோ லோகத்ரயமாவிஸ்ய பி3ப4ர்த்யவ்யய ஈஸ்வர: || (17) ||

யஸ்மாத்க்ஷரமதீதோ ऽஹமக்ஷமக்ஷராத3பி சோத்தம: |
அதோ ऽஸ்மி லோகே வேதே3 ச ப்ரதித: புருஷோத்தம: || (18) ||

யோ மாமேவ மஸம்மூடே4ா ஜாநாதி புருஷோத்தமம்
ஸஸர்வித்4 ப4ஜதி மாம் ஸர்வபா4வேன பா4ரத || (19) ||

இதி கு3ஹ்யதமம் ஸாஸ்த்ரமித3 முக்தம் மயாநக4 |
ஏதத்3 பு3த்3த்4வா பு3த்3தி4மான்ஸ்யாத் க்ருதக்ருத்யஸ்ச பா4ரத ||
|| (20) ||

|| இதி ஸ்ரீமத்3ப4க3வத்கீ3தாஸு உபநிஷத்ஸு ப்3ரஹ்மவித்3யாயாம் யோகஸாஸ்த்ரே ஸ்ரீக்ருஷ்ணார்ஜுனஸம்வாதே3 புருஷோத்தமயோகோ3 நாம பஞ்சத3சோऽத்4யாய : ||

ஹரி ஸர்வோத்தமா !    வாயு ஜீவோத்தமா !!

# ஸ்ரீ மத்வாச்சாரியார்



ந மாதவ ஸமோ தேவோ ந ச மத்வ ஸமோ குரு: |

ந தத் வாக்ய ஸமம் ஸாஸ்த்ரம் நச த்ஜ்ஞ ஸம: புமான் ||